# செந்தமிழ்ச் செல்வி




சிலம்பு-௫௬ தி. வ. ஆண்டு-௨௦௧௬ பங்குனி பரல்-௮

ஏப்பிரல் 1985

# "செந்தமிழ்ச் செல்வி"

(செந்தமிழ்த் திங்கள் வெளியீடு)




---

# உள்ளுறை

பக்கம்

# செந்தமிழ்ச் செல்வி

திங்கள் வெளியீடு

சிலம்பு-ருசு திரு. வ. ஆண்டு உ0கசு, பங்குனி பரல்-அ

ஏப்பிரல் 1985


---

## செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலி

முதல் தாய்மொழி, கன்னித் தமிழ், என்றுமுள தென்றமிழ், சீரிளமைச் செந்தமிழ் என்றெல்லாம் புகழப்படுவது நந்தமிழ் மொழி, இதற்குக் காணியம் இம் மொழி பெற்றிருக்கும் இலக்கண இலக்கிய வளம்.

பிறமொழிகளைப் போலின்றி, தமிழ் மொழியின் சொற்கள் அனைத்தும் வறிதே தோன்றியனவல்ல. ஒவ்வொன்றுக்கும் ஒரு வேர்ச்சொல் உண்டு. அதன் அடிப்படையில் பொருளும் உண்டு. இதுபற்றியே ''எல்லாச் சொல்லும் பொருள் குறித்தனவே'' என் கிறது ஒல்காப்புகழ் தொல்காப்பியம்.

இத்தகைய சொல்வளம் நிரம்பிய மொழிக்குச் சீரிய செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலி ஒன்று தேவை என்பது நம்மனோரால் பல்லாண்டுகளாக உணரப்படாமலிருந்தது. யாழ்நாட்டுப் பேரறிஞர் ஞானப்பிரகாசர் முதன்முதல் இம் முயற்சியில் ஈடுபட்டுப் பேரகராதி யைத் தொகுக்க முற்பட்டு ஒரு சில மடலங்களை வெளியிட்டார். அதனைத் தொடர்ந்து ஒரு சில மடலங்கள் தவத்திரு. டேவிட் அவர் களால் வெளியிடப்பெற்றது. அதன்பின் அப் பணி முற்றுப் பெறாமல் போயது. மொழிஞாயிறு தேவநேயப் பாவாணர் அவர்கள் மொழியாராய்ச்சியில் ஈடுபட்டுத் தமிழே முதல் தாய்மொழி என்பதைப் பல்லாண்டுகளாகப் பேசியும் எழுதியும் வந்ததன் விளை வாக, செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலி சித்தப்படுத்தப்பட வேண்டியதன் இன்றியமையாமையினை நற்றமிழ் வல்லுநரும் தமிழ் நாட்டரசும் உணரத் தலைப்பட்டனர்.

முன்னுள் தமிழக முதல்வர் டாக்டர் கலைஞரவர்கள் இவ்வகர முதலித் தொகுப்பில் நாட்டம் செலுத்தி, அதற்குப் பல்லாற்ருனும் தகுதியுடையவர் நம் மொழிஞாயிறு பாவாணர் அவர்களே என்பதை அறிந்து, அவர்தம் தலைமையில் ஒரு குழு அமைத்து இப் பணி யினை 1974ஆம் ஆண்டில் துவக்கி வைத்தனர்.

பாவாணர் அவர்களை இயக்குநராகக் கொண்டு, செவ்வனே பணியாற்றிய செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் தொகுப்புக் குழுவினர் இப்போது அதன் முதற்பகுதியை வெளியிட்டுள்ளனர். ஆனல் சீரிய முறையில் வெளிவந்திருக்கும் இத் தொகுப்பினைக் காணும் பேறு பாவாணர் அவர்கட்குக் கிட்டாமல், இயற்கை அவரை ஆட் கொண்டு விட்டமை வருந்தத்தக்கதே.

பாவாணர் அவர்கள் இருந்திருந்தால் இன்னும் முன்னரே இத் தொகுதி வெளிவந்திருக்கும் என்பதில் ஐயமில்லை. எனினும், அவர் விட்டுச் சென்ற பணியினைப் பேராசிரியர் மதிவாணனும், மற்றுமுள்ள மொழி வல்லுநர்களும் இவ்வகர முதலியைத் திட்ப நுட்பம் செறியத் தொகுத்தளித்திருப்பது கண்டு பெருமகிழ்ச்சி அடை கிறேம். கண்ணுக்கும் கருத்துக்கும் விருந்தளிக்கும் வகையில் இத் தொகுதியினை உருவாக்கப் பேருழைப்பினை மேற்கொண்ட அறிஞர் பெருமக்கட்கு எமது பாராட்டுகளைத் தெரிவித்துக் கொள்ளுகிறேம்.

இம் முதல் தொகுதி வெளிவர ஏறத்தாழ பத்தாண்டுகள் கடந்து விட்டமை ஒரு குறைபாடேயாயினும், போதிய வசதிகள் இல்லாத சூழ்நிலையில் இப் பணி துவக்கப்பட்டதை எண்ணிப் பார்க்கின்ற எவரும் இதுபற்றிக் கூறைகூற ஒருப்படார். அடுத்து வெளிவரவிருக்கும் அகரமுதலித் தொகுப்பு விரைந்து நடை போடும் என எதிர்பார்க்கிறேம்.

அகரமுதலித் தொகுப்புப் பணி. ஓர் அரிய கலைப்பணி. இப் பணியில் மேலைநாட்டினர் விரைந்து முன்னேறுகின்ற இவ் வேளை யில், ஓர் அரிய மொழிக்கு உரியவர்களாகிய நாம் இத் துறையில் மேலும் ஊக்கம் செலுத்தக் கடமைப்பட்டுள்ளோம்.

''இதனை இதனால் இவன்முடிக்கும் என்றாய்ந்து
அதனை அவன்கண் விடல்''

என்னும் பொய்யா மொழிக்கேற்ப இப் பணிக்குப் பாவாணர் அவர் களைத் தேர்ந்தெடுத்த தமிழக அரசுக்கும் அவர்தம் முயற்சிகட்கு இந் நாள்காறும் துணை நின்று நற்றமிழ்ப் பணியாற்றும் தமிழக முதல்வர் மாண்புமிகு ம. கோ. இராமச்சந்திரன் அவர்கட்கும் நமது நன்றி யைத் தெரிவித்துக் கொள்வதோடு, மேலும் இப் பணி தொடர புரட்சித் தலைவரவர்கள் ஆக்கமும் ஊக்கமும் அளிப்பார்கள் என உறுதியாக எதிர்பார்க்கிறேம்.

———

# எழுத்துகளா? எழுத்துக்களா?

[கழக இலக்கியச் செம்மல்,
புலவர் இரா. இளங்குமரன்]

[இக்கட்டுரை முதுபெரும் புலவர் மே. வீ. வேணுகோபாலப்பிள்ளை அவர்கள் நினைவாக வெளியிடப்படுகின்றது. 1966ஆம் ஆண்டு ஏப்பிரல் திங்கள் 4, 5ஆம் நாள்களில் சென்னைப் பல்கலைக் கழகத்தில் திரு. மே. வீ. வே. 'தமிழ் அன்றும்-இன்றும்' என்னும் தலைப்பில் படித்த கட்டுரையினின்று எடுக்கப்பட்டது.]

—இரா. இளங்குமரன்

வன்றொடர்க் குற்றுகரத்தின் பின்வலிமிகல் :

'வன்றொடர் அல்லன முன்மிகா அல்வழி'

என்னும் விதியால் வன்றொடர்க் குற்றுகரத்தின் பின் வருமொழி முதலில் வரும் வல்லினம் அல்வழி வேற்றுமை என்னும் ஈரிடத்தும் மிகும் என்பது பெறப்பட்டது. ''சுக்குக் கடிது, பதக்குப் பெரிது என வன்றொடரின் மிக்கவாறு காண்க'' என்றார் மயிலைநாதர். சுக்குக் கடிது, பதக்குப் பெரிது என்பன எழுவாய்த் தொடர்கள் என்பதை நாம் அறிவோம்.

'கொக்குப் பறக்கும்; புருப்பறக்கும்
குருவி பறக்கும்; குயில் பறக்கும்;
நக்குப் பொறுக்கி களும்பறப்பார்;
நானேன் பறப்பன் நராதிபனே''

என்னும் இராமகவிராயர் பாட்டிலும் 'கொக்குப் பறக்கும்' என அல்வழியிலும், 'நக்குப் பொறுக்கிகள்' என வேற்றுமையிலும் வலிமிக்கதைக் காண்கிறோம். இவ்விதி பொருட்புணர்ச்சிக்குக் கூறியது. இதையே விகுதிப் புணர்ச்சிக்கும் விதியெனக் கருதி, பலர் எழுத்துக்கள், கருத்துக்கள், பதிப்புக்கள் என எழுதலாயினர். இது பொருந்து மாறில்லை.

வாழ்த்துதல், கூப்புக என்னும் சொற்களில் விகுதியில் உள்ள தகர பகர மெய்கள் மிகாமைக்குக் காரணமென்ன? விகுதிகள் இடைச் சொல்லாதலே காரணம் எனக் கொள்ளலாம்.

வாழ்த்துகின்றோம், கூப்புகிறோம் என்னும் சொற்களைப் பகுதி விகுதி இடைநிலையாகப் பிரிக்குங்கால் 'வாழ்த்து + கின்று + ஓம்'

எனவும் 'கூப்பு+கிறு+ஓம்' எனவும் பிரிக்கின்றோம். இவற்றில் வாழ்த்து, கூப்பு என்னும் பகுதிகள் வன்றொடர்க் குற்றுகர மொழிகளே. பொருட்புணர்ச்சி விதியின்படி இவற்றை யாரும் 'வாழ்த்துக்கின்றோம்' 'கூப்புக்கின்றோம்' என எழுதுவதுமில்லை உச்சரிப்பதுமில்லை. காரணம் யாது? கின்று கிறு என்பனவும் இடைச் சொற்களாயிருப்பதேயன்றோ? எனவே, இடைச் சொற் புணர்ச்சியாகிய இடைநிலை, விகுதிப்புணர்ச்சிகளில் வலிமிகாது என்பது பெறப்பட்டது.

> ''இடையுரி வடசொலின் இயம்பிய கொளாதவும்
> போலியும் மரூஉவும் பொருந்திய ஆற்றிற்
> கியையப் புணர்த்தல் யாவர்க்கும் நெறியே''

என்னும் நன்னூற் சூத்திரத்தால் (239) இவ்விகுதிப் புணர்ச்சிக்கு அமைதி காண்பதே பொருத்தமாம். இங்ஙனம் கொண்டாரும் உளர் என்பது அறியத் தக்கது.

பழைய ஏட்டுச் சுவடிகள் சிலவற்றில் விகுதிப் புணர்ச்சியில் வன்றொடர்க் குற்றுகரத்தின் பின் வலி மிகாதிருப்பதைக் காணலாம். இலக்கணப் பெரும்புலமை பெற்றவராகிய யாப்பருங்கலக்காரிகை உரையாசிரியராகிய குணசாகரரும், நன்னூல் உரையாசிரியர் களாகிய இராமானுச கவிராயரும் திருத்தணிகை விசாகப் பெருமாள் ஐயரும், பின்னூலாசிரியராகிய மறைமலையடிகளாரும் இக் கருத்தையே மேற்கொண்டவர்கள் என்பதை முன்னவர் மூவரின் பழைய பதிப்புகளையும் பின்னவர் 1925ஆம் ஆண்டு ஜூலைத் திங்களில் பதிப்பித்த சிந்தனைக் கட்டுரைகள் என்னும் நூலையும் கண்டு தெளியலாம்.

தொட்டிக்கலைச் சுப்பிரமணிய முனிவர் இயற்றிய கலைசைச் சிலேடை வெண்பாவில்,

> ''மாதரம்பொற் கொப்புகளும் மன்னீர் மதகுகளும்
> காதலையப் போடும் கலைசையே''

என 'கொப்புகள்' என்னும் சொல்லை ஆண்டிருப்பதைக் காணலாம்.

> ''மாதரம்பொற் கொப்புடனே மன்னீர் மதகுகளும்
> காதலையப் போடும் கலைசையே''

என அமைப்பினும் வெண்பாக் கெடாதன்றோ?

கவிஞர் தேசிக விநாயகம் பிள்ளையவர்கள் பாடிய 'குழந்தைச் செல்வம்' என்னும் நூலின் 51ஆம் பாடலில் 'நாடியே வட்டுகள்

ஆடிடுவோம்' என்னும் அடியில் வட்டுகள் என்னும் சொல்லைக் காணலாம். 'நாடியே வட்டுக்கள் ஆடிடுவோம்' என்றாலும் பாட்டுக் கெடாதன்றோ ?

உமறுப் புலவர் தம் சீறுப்புராணம் தலைமுறைப் படலம் 15ஆம் செய்யுளில் 'மலக்குகள் வணக்கம் செய்தார்' எனப் பாடியிருக்கிறார்.

விசாகப் பெருமாளையர் அவர்கள் தாமியற்றிய பாலபோத விலக்கணம் 1870ஆம் ஆண்டு, பதிப்பில் உயிரெழுத்துகள், குற்றெழுத்துகள், நெட்டெழுத்துகள், மெய்யெழுத்துகள், இனவெழுத்துகள், போலியெழுத்துகள், உறுப்புகள், வினைமுற்றுகள், வடவெழுத்துகள், முதலெழுத்துகள், முடிப்புகள், தொகுப்புகள் என விகுதிப் புணர்ச்சியில் வலிமிகாமலே பதிப்பித்திருக்கிறார்கள்.

இராமாநுச கவிராயர் 1848ஆம் ஆண்டு வெளியிட்ட இலக்கணச் சுருக்கத்திலும் நன்னூல் உரையிலும் இம்முறையையே மேற்கொண்டுள்ளார்.

———

## பாவேந்தர் இன்றிருந்தால்...

[நாகை வேலன்]

புரட்சிக் கவிஞரின்று புவிமீது வாழ்ந்திருந்தால்
பொல்லாத சிங்களவர் போடுகின்ற திட்டமெல்லாம்
பொடியாகிப் போகும்வண்ணம் புரட்சிக் கவிபுனைந்து
போலித் தமிழர்களின் பொய்வேடந் தனைக்களைந்து
புத்துணர்வை நமக்கெல்லாம் புகட்டி மகிழ்ந்திடுவார்
பொருந்தாத வாதங்கள் பொடிப்பொடி யாகும்வண்ணம்
பொருத்தமுள்ள சான்றுகளால் போலிகளின் நாவடக்கிப்
புரட்சிப் புலிகளுக்குப் புதுப்பாதை காட்டிடுவார்.

பாவேந்தர் இன்றிந்தப் பார்மீது வந்துற்றால்
பகுத்தறிவுத் தந்தையொடு பண்பாளர் அண்ணாவும்
பாடுபட்டு வளர்த்திட்ட பயனுடைநல் இனப்பற்றும்
பழகுதமிழ் மொழியுணர்வும் பகுத்தறிவுச் சிந்தனையும்
பாழாகும் விதங்கண்டு பதறிக்கண் ணீர்வடிப்பார்
பாரதமும் சிங்களமும் பாடுகின்ற பல்லவியைப்
பார்த்துச் சிரித்திடுவார், பாக்களினால் நம்மவரின்
தூக்கங் களைந்திடுவார் தூயபணி ஆற்றிடுவார்.

# பாவாணர் பாதையில்....

## [பேராசிரியர் இரா. மதிவாணன்]

(முன் இதழ் உஎஎஆம் பக்கத் தொடர்ச்சி)

பாவாணர் அகரமுதலி ஏனைய அகரமுதலியினும் தனித்தன்மை வாய்ந்தது. ஒரு பொருளுக்கு அப்பெயர் ஏன் வந்தது என்று காரணம் காட்டுவது மட்டுமன்றி அந்தச்சொல் பிறந்து வளர்ந்த படி முறை வளர்ச்சியைப் பாவாணர் தெளிவாகக் காட்டுகிறார். பொருளின் வரலாறும், சொல்லின் வரலாறும் அவர் ஆராய்ச்சியில் நன்கு மிளிரும். ஒரு சொல் கூட்டுச்சொல்லாயினும், தனிச்சொல் லாயினும் சொற்பிறப்பு அளவில் சமமாகவே மதிக்கப்படும். பாவாணரின் வேர்ச்சொல் கட்டுரைகளில் ஆணிவேர்கள் ஓரசைத் தனிச்சொற்களாக இருப்பினும் அவற்றிலிருந்து பிறந்து வளரும் கூட்டுச்சொற்களையும் பாவாணர் ஆங்காங்கே எடுத்துக்காட்டியிருக் கிறார். தமிழிலக்கியங்களிலும், தமிழ்ப் பண்பாட்டுக் கூறுகளிலும் இடம்பெற்ற அரிய செய்திகளும், பொருள்களும் இயன்றவிடமெல் லாம் படவிளக்கங்களோடு தரப்படின் பெரிதும் சிறப்பாயிருக்கும் என்று கருதினார். தமிழக அரசும் பாவாணரின் தரமான அகரமுதலி வெளியீட்டுணர்வைத் தக்காங்கு நாடி அகரமுதலி வண்ணப்பட விளக்கங்களுடன் வெளியிட இசைவளித்தது. அகரமுதலி வர லாற்றில் நெஞ்சுகந்த நன்றியுடன் எந்நாளும் நினைவுகூரத்தக்க அரிய நிகழ்ச்சியாகும்.

**பட விளக்கங்கள் :**

அவரையின் வகைகள், அறுகம்புல்லின் வகைகள் ஆகியவை ஆங்காங்கு பேசப்படுகின்றனவேயன்றி அவற்றை ஒருசேர வண்ணப் படமாகத் தொகுத்துக்காட்டும் முயற்சியில் எவரும் இறங்கவில்லை. வருங்கால ஆய்வுக்கு அது மிகவும் பயன்படுமொன்றாதலின் இத்தகு படவிளக்கங்களைப் பாவாணர் பெரிதும் வற்புறுத்தினார். பாவாணரின் அகரமுதலியில் அவரையின் வகைகள், அறுகம்புல்லின் வகைகள் வண்ணப்பட விளக்கங்களாகத் தொகுக்கப்பட்டுள்ளன. அறுகம் புல்லின் 10 வகைகளைக் காண மதுரை மாவட்டத்திலுள்ள கல்லுப் பட்டி தொடக்கப் பள்ளியாசிரியர்களும் உள்ளூர் நாட்டு மருத்துவர் களும் தக்க உதவி செய்ததினால் அவற்றை இனம் கண்டறிந்து பட மாக்க முடிந்தது.

அன்றில் :

தமிழிலக்கியங்களில் இணைபிரியா அன்பு வாழ்வுக்கு அடையாளமாகக் கூறப்படுவது அன்றில் பறவை. அகரமுதலிக்கு நாட்டுப்புறச் சொற்களைத் தொகுப்பதற்குப் பல மாவட்டங்களில் சுற்றுப்பயணம் செய்தபோது இராமநாதபுரம் மாவட்டம் அருப்புக் கோட்டையை அடுத்த காரியாப்பட்டியிலும் அதையடுத்த பகுதி களிலும் அன்றில் (பறவைகள் நாற்பதைம்பது மட்டும்) இனம் உயிரோடிருப்பது தெரியவந்தது. அவற்றை வண்ணப்படமெடுப்பதற் காகச் செய்த முயற்சிகள் முதலில் பயனளிக்கவில்லை. 200 அடி தொலைவிலேயே அப்பறவைகள் நெருங்கிவரும் மாந்தரை உணர்ந்து எச்சரிக்கையாகப் பறந்து ஓடிவிடுகின்றன. தொலைவிலுள்ள பறவை களைப் படம்பிடித்தற்கான நுண்வகை பெருக்காடிகள் (Telescopic lenses) கொண்ட படம்பற்றி (camera) நம்மிடமில்லை. இந்நிலையில் சென்னையிலுள்ள இந்திய விலங்கியல் ஆய்வுத் துறையின் உதவியால் அன்றில் பறவையின் வண்ணப்படத்தைப் பெற முடிந்தது. கோழியைவிடப் பெரியதாகவும், தோற்றத்தில் ஓர் இளம் மயிற் பேடை போலவும் காணப்படும் அன்றில், ஈராயிரமாண்டுகளாக தமிழகத்தில் இருப்பது இதுவரை தெரியாமலிருந்தது. பாவாணர் அகரமுதலிக்காக வண்ணப்படங்களைத் திரட்டும் முயற்சியில் ஈடுபட்டதால்தான் அன்றில் பறவையைத் தமிழக மக்களின் பார்வைக்குக் கொணர முடிந்தது.

குறுந்தொகையில் வரும் விளக்கம் முழுமையாகவே அன்றில் பறவைக்குப் பொருந்துவதாக விருக்கிறது. நெருப்பு போன்ற செந்தலையையும், இறுல்மீனைப் போன்ற வளைந்த மூக்கினையும், காண முடிகிறது. அன்றில் பறவைகள் இணைந்து இணைந்தே காணப்படுகின்றன. நேரில் பார்ப்பவர்கள் இதைக் காணமுடியும்.

ஒன்றின்றி மற்றொன்று இல்லாத நிலைமைத்தாதலின் இதற்கு 'அன்றில்' எனப் பெயர் வந்தது. இன்றும் உள்ளூர் மக்கள் அன்றில் பறவையை வேட்டையாடுவதை எதிர்க்கின்றனர். அவற்றின் அன்பு வாழ்வுக்கு உள்ளூர நன்றி செலுத்தி உவக்கின்றனர்.

> "நெருப்பி னன்ன செந்தலை யன்றில்
> இறவி னன்ன கொடுவாய்ப் பெடையொடு
> தடவி ணோங்குசினைக் கட்சியில் பிரிந்தோர்
> கையற நரலும்.........." (குறுந்தொகை-160)

> "மனைசேர் பெண்ணை மடிவாய் அன்றில்
> துணை யொன்று பிரியினும் துஞ்சாகாண்" (அகம். 50)

———

# ஆதீனங்கள் வளர்த்த அருந்தமிழ்

[புலவர் மு. சிவச்சந்திரன், எம். ஏ., பி. எட்.,
துணைப் பேராசிரியர்,
தருமையாதீனப் பல்கலைக் கல்லூரி, தருமபுரம்.]

(முன் இதழ் உ௮௩ஆம் பக்கத் தொடர்ச்சி)

''இவர்களுடைய பொருளுதவியால் பலர் வாயிலாகப் பலவகைத் தமிழ் நூல்கள் வெளிவந்திருத்தலைத் தமிழுலகம் நன்கு அறியும். தமிழ் மொழிப் பயிற்சியின் வளர்ச்சி ஒன்றினையே கருதி வருடந் தோறும் சென்னைச் சர்வகலாசாலைத் தனித்தமிழ் வித்துவான் தேர்வில் முதல் வகுப்பில் முதல்வராகத் தேர்ச்சி பெறுபவருக்கு ஆயிரம் ரூபாய் பரிசாக அளிக்கும்படி நிலையான ஏற்பாடு ஒன்றை இவர்கள் செய்து பெரும்புகழைப் பெற்று விளங்குவது தமிழ் நாட்டார் பலர் அறிந்ததே. இத்தகைய பேருதவியை இதுவரையில் ஒருவரும் செய்யவில்லை. இப் பரிசு அளிக்கத் தொடங்கியபின் வித்துவான் தேர்வுக்குப் படிப்பவர்களுடைய தொகை அதிகரித்துக் கொண்டே வருகிறது'' என்று பாராட்டி எழுதியுள்ளார்கள்.

அடுத்து 20ஆவது பட்டத்தில் எழுந்தருளிச் சிவப்பணியும் செழுந்தமிழ்ப் பணியும் செய்தருளியவர்கள் ஸ்ரீலஸ்ரீ காசிவாசி அருள்நந்தித் தம்பிரான் சுவாமிகள் அவர்கள் ஆவார்கள். இவர்கள் தம் அருளாட்சிக் காலத்தில் சமய, சமூக, மொழி வளர்ச்சிக்கென ஏற்படுத்தப் பெற்ற அறக்கட்டளை வைப்புப் பொருள் ஏறத்தாழ 1 கோடி ரூபாய் ஆகும். அதில் தமிழ் வளர்ச்சிக்கு மட்டும் அளித்த வைப்புத் தொகையின் மதிப்பு ஏறத்தாழ 40 நூறுயிரம் ஆகும். இத்தகைய பெருந்தொகையை மொழி வளர்ச்சிக்கெனப் பல்வேறு இடங்களில் பல்வேறு நிலைகளில் நிலை வைப்பாக அமைத் தருளியுள்ளார்கள்.

தமிழ் வித்துவான்களை உருவாக்கும் தமிழ்க் கல்லூரி ஒன்றனை 1944 ஏப்பிரலில் தொடங்கியருளினார்கள். இக் கல்லூரியில் பயின்று இன்று ஏறத்தாழ ஆயிரத்திற்கும் மேற்பட்ட தமிழ்ப் புலவர்கள் நாடெங்கும் தமிழ்ப் பணியாற்றி வருகிறார்கள்.

1950இல் குமரகுருபரன் என்னும் திங்களிதழ் ஒன்றை ஸ்ரீவை குண்டத்தைத் தலைமை இடமாகக் கொண்டு வெளிவரச் செய் தார்கள். இந்த இதழ் சில ஆண்டுகள் இடைவெளி விட்டு இப் பொழுது 'ஸ்ரீகுமரகுருபரர்' என்னும் பெயரால் 21ஆவது பட்டத்தில்

இதுபொழுது எழுந்தருளி அருளாட்சி செய்துவரும் ஸ்ரீலஸ்ரீ காசிவாசி முத்துக்குமாரசுவாமித் தம்பிரான் சுவாமிகள் அவர்களின் அருளாணையின் வண்ணம் சிறப்பாக வெளிவந்து கொண்டிருக்கிறது.

மேலும் இப்பொழுது பட்டத்தில் எழுந்தருளியுள்ள ஸ்ரீலஸ்ரீ காசிவாசி சுவாமிகள் அவர்கள் பல தோத்திர நூல்களை வெளியிடச் செய்து வருதலோடு மெய்கண்ட சாத்திர நூல்களைத் தனித்தனியே திருப்பனந்தாள் செந்தமிழ்க் கல்லூரி முதல்வர் திரு. இ. சுந்தரமூர்த்தி அவர்களைக் கொண்டு தக்க உரை எழுதுவித்து எளிய விலையில் தமிழ்ச் சைவ உலகம் வாங்கிப் பயனுறும் வகையில் வெளியிட்டருளுகின்றார்கள். சைவசித்தாந்த மாநாடுகள் கூட்டிச் சாத்திர நூல்களில் ஆய்வுகள் நிகழும் வண்ணம் பேருதவி செய்து வருதலோடு ஆங்காங்கே பல்வேறு நிலைநிதிகளை வைத்துத் தோத்திர சாத்திர அறிவு பலரிடமும் பரவித் திகழ ஏற்பாடு செய்தருளுகின்றார்கள்.

இங்ஙனம் உள்ள பல்வேறு பணிகளை நோக்கத் தமிழ் வளர்ச்சியில் ஸ்ரீகாசிமடம் மேற்கொண்டுள்ள செயல்கள் குறிக்கத்தக்கவை என்பதனை அனைவரும் உணர்வர்.

## திருவாவடுதுறை ஆதீனம் :

அடுத்து திருவாவடுதுறை ஆதீனம் தமிழ் வளர்ச்சிக்குச் செய்து வரும் அரும்பணிகள்பற்றிச் சிந்திப்போம்.

திருக்கயிலாய பரம்பரையின் வழிவந்து ஸ்ரீநமச்சிவாய தேசிக சுவாமிகளால் தோற்றுவிக்கப் பெற்ற மூத்த திருமடமே திருவாவடுதுறை ஆதீனமாகும். இவ்வாதீனத்தின் மூன்றாவது குருமூர்த்திகளாக இருந்த ஸ்ரீலஸ்ரீ அம்பலவாண தேசிக சுவாமிகள் பத்து ஞான நூல்களை அருளிச் செய்துள்ளார்கள். தசகாரியம், சன்மார்க்க சித்தி, சிவாச்சிரமத் தெளிவு, சித்தாந்தப் பஃறொடை, சித்தாந்த சிகாமணி, உபாயநிட்டை வெண்பா, உபதேச வெண்பா, நிட்டை விளக்கம், அதிசய மாலை, நமச்சிவாயமாலை என்பன அவை. பத்து நூல்களிலும் உள்ள பயன்மிகு பாடல்களை எடுத்துக்கூற இடம் போதாமையால் ஒரே ஒரு பாடலை இங்கு நினைவு கூரலாம். சித்தாந்தப் பஃறொடை என்னும் நூலில் உள்ள,

''செய்யாப் பணிபலவும் செய்வேன் திருவுளத்துச்
செய்யும் பணிசிறிதும் செய்தறியேன்—உய்யுநெறி
எத்தால் வருமடியேற் கின்பா வடுதுறைக்குள்
அத்தா நமச்சிவா யா''

என்னும் அருட்பாடலை அடிக்கடி நாம் சிந்தித்தல் நலம் பயக்கும் என்பதில் ஐயமில்லை.

எட்டாவது குருமூர்த்திகளாக எழுந்தருளியிருந்த ஸ்ரீலஸ்ரீ மாசிலாமணி தேசிகர் அருளாட்சிக் காலத்தில் துவிதீய ஆசிரியராகி யிருந்தவர் சிவக்கொழுந்து தேசிகர் ஆவார். இலக்கணக் கொத்து என்னும் நூல் இயற்றியவரும் ஈசான தேசிகர் என்னும் சிறப்புத் திருநாமம் பெற்றவருமான சுவாமிநாத தேசிகர் இங்குத் திரிதீய ஆசிரியராக வீற்றிருந்தவர் ஆவர். இச் சுவாமிநாததேசிகரிடத் தில் கல்வி பயின்ற மாணாக்கர்களில் ஒருவர் நன்னூலுக்கு விருத்தி யுரை செய்த சங்கர நமச்சிவாயப் புலவர். இதனை இவர் எழுதிய நன்னூல் உரைச் சிறப்புப் பாயிரம் தெளிவுறக் கூறுகிறது.

> ''மலர்தலை உலகிற் பல நூலாய்ந்து
> செய்வதும் தவிர்வதும் பெறுவதும் உறுவதும்
> உய்வதும் அறியேன் ஒருபொருளாக
> நன்னெறி பிறழா நற்றவத்தோர் பெறும்
> தன்னடித் தாமரை தந்தெனை யாண்ட
> திருவாவடுதுறைத் தேசிகனாகிய
> கருணையெங் கடலைஎன் கண்ணைவிட் டகலாச்
> சுவாமி நாத குரவனை அனுதினம்
> மனமொழி மெய்களால் தொழுது அவனருளால்
> ..............................''

என்னும் வரிகள் அதற்குக் காட்டுகளாகும்.

பதினொன்றுவது பட்டத்தில் எழுந்தருளியிருந்த ஸ்ரீலஸ்ரீ பின் வேலப்ப தேசிகர் அருளாட்சிக் காலத்தில் திருவாவடுதுறையில் இருந்து குருலிங்க சங்கம சேவை செய்துகொண்டு அருங்கலை வல்லுநராய் எழுந்தருளியிருந்த ஸ்ரீமாதவச்சிவஞான சுவாமிகள் ஆதீன பிரதம ஆசிரியராகிய ஸ்ரீபஞ்சாக்கர மூர்த்தியின்மீது தோத் திரமாக 'பஞ்சாக்கர தேசிகர் மாலை' என்னும் நூலொன்றை அருளிச் செய்தார். மேலும் சுவாமிகள், நன்னூலுக்குச் சங்கர நமச்சிவாயப் புலவர் செய்த புத்துரையாகிய விருத்தியுரையைத் திருத்தம் செய்தும் உரிய விளக்கங்கள் அளித்தும் ஒரு நூலை அருளிச் செய்தார்கள். மற்றும் இலக்கண விளக்கச் சூறாவளி, முதற்சூத்திரவிருத்தி, சித்தாந்த மரபு கண்டன கண்டனம். சிவஞான போதச் சிற்றுரை, சிவஞான போதப் பேருரை போன்ற அரிய பெரிய நூல்களையும் அருளிச் செய்தார்கள்.

(தொடரும்)

———

# குடந்தைக் கீழ்க்கோட்டம் கல்வெட்டுகள்

[டாக்டர் இரா. கலைக்கோவன், எம்.பி.பி.எசு., டி.ஓ.]

பழமைச்சிறப்பும் கலைச்சிறப்பும் வாய்ந்த குடந்தை மாநகர்க் கோயில்களுள் குறிப்பிடத்தக்கது, அப்பரடிகளால் குடந்தைக் கீழ்க் கோட்டம் என்று போற்றப்படும் அருள்மிகு நாகேசுவரர் திருக் கோயிலாகும். கும்பகோணத்தில் நகரின் நடுவில் அமைந்திருக் கும் இக் கோயில், ஆயிரத்து ஐந்நூறு ஆண்டுகட்கு முற்பட்ட பழமைச் சிறப்புடையதாகும். கி. பி. ஏழாம் நூற்றுண்டில் வாழ்ந்த தாகக் கருதப்படும் திருநாவுக்கரசர் பெருமான் இப்பதிவாழ் இறை வனைப் போற்றிப் பரவி, 'சொல் மலிந்த' எனத் தொடங்கும் தாண்டகமொன்றைப் பாடியுள்ளார். அப்பரைப் போலவே சம்பந்த ரின் திருவடிகளும் இக் கோயில் மண்ணை மிதித்திருக்கின்றன.

கலைச்சிறப்பு மிகுந்த இக் கோயிலில் இருந்து நாற்பத்தொரு கல்வெட்டுகள் படியெடுக்கப்பட்டுள்ளன. அவற்றுள் ஒன்று பாண்டிய மன்னன் மாறன் சடையனுடையது. மற்றென்று விசய நகரப் பேரரசருடையது. ஏனைய முப்பத்தொன்பது கல்வெட்டு களும் சோழர்களுடையவை. சோழ மன்னர்கள் இக் கோயிலின் வளர்ச்சியிலும் எழுச்சியிலும் எத்தனை ஆர்வம் கொண்டவர்களாக இருந்தார்கள் என்பது அவர்களின் கல்வெட்டு எண்ணிக்கையில் இருந்தே விளங்கும்.

கல்வெட்டுகளின் பட்டியல்:

| | | |
|---|---|---|
| 1. | முதற் பராந்தகனின் கல்வெட்டுகள் | 7 |
| 2. | கண்டராதித்த சோழனின் கல்வெட்டுகள் | 2 |
| 3. | இரண்டாம் ஆதித்த கரிகாலனின் கல்வெட்டுகள் | 6 |
| 4. | உத்தம சோழனின் கல்வெட்டுகள் | 4 |
| 5. | முதலாம் இராசேந்திரனின் கல்வெட்டுகள் | 2 |
| 6. | முதலாம் இராசாதிராசனின் கல்வெட்டு | 1 |
| 7. | மூன்றும் குலோத்துங்கனின் கல்வெட்டு | 1 |
| 8. | மூன்றும் இராசராசனின் கல்வெட்டுகள் | 2 |

9. மன்னன் பெயர் தெரியாத இராசகேசரியின் கல்வெட்டுகள் 4
10. மன்னன் பெயர் தெரியாத பரகேசரியின் கல்வெட்டுகள் 8
11. மன்னன் பெயரோ அடைமொழியோ ஏதுமற்ற கல்வெட்டுகள் 2

**பாண்டியன் மாறன் சடையனின் கல்வெட்டு :**

குடந்தைக் கீழ்க்கோட்டம் திருக்கோயிலில் உள்ள அம்மன் திருமுன்னின் மேற்குப்புறச் சுவரில் பாண்டிய மன்னன் மாறன் சடையனின் எட்டாம் ஆட்சியாண்டுக் கல்வெட்டொன்று காணப் படுகிறது இப் பாண்டிய மன்னன் நெடுஞ்சடையன் பராந்தகனா, வரகுண பாண்டியனா என்பதில் கல்வெட்டறிஞர்களுக்குள் கருத்து மாறுபாடு உள்ளது. திருக்குடமூக்கிலுள்ள திருக்கீழ்க் கோட்டத்துப் பட்டாரகர் கோயிலில் இரண்டு விளக்குகள் எரிக்க நூறு காசும் பாலுக்காக நூற்று முப்பத்தெட்டு பசுக்களும் இம் மன்னன் வழங்கி யதை இக் கல்வெட்டு தெரிவிக்கிறது.[1]

**முதற் பராந்தகனின் கல்வெட்டுகள் :**

பல்லவ பாண்டியர் பிடியிலிருந்து சோழ நாட்டை மீட்டு, மீண்டும் தமிழகத்தில் சோழப் பேராட்சியை மலரச் செய்த விசயாலயச் சோழனின் பெயரனும், காவிரியின் இருகரைகளிலும் கணக்கற்ற கோயில்களை எழுப்பிய முதலாம் ஆதித்தனின் மகனு மான முதற் பராந்தகன் கி. பி 907இல் இருந்து 953 வரை ஏறத்தாழ நாற்பத்தாறு ஆண்டுகள் அரசாண்டவன். இம் மன்ன னுடைய காலத்தில் வெட்டப்பட்ட கல்வெட்டுகள் ஏழு இத் திருக் கோயிலில் உள்ளன. இவற்றுள் மூன்று ஆட்சியாண்டு தெரி யாதவை. ஏனைய நான்கும் முறையே இருபத்தேழு, முப்பத்தெட்டு, நாற்பது ஆகிய ஆட்சியாண்டுகளில் வெட்டப்பட்டவை. இவை இவ்வேந்தனை மதுரை கொண்ட கோப்பரகேசரி என்றும், மதுரையும் ஈழமும் கொண்ட கோப்பரகேசரி என்றும் மகிழ்வோடு அழைக் கின்றன. இந்த ஏழு கல்வெட்டுகளுள் நான்கு இக் கோயிலுக்குச் செய்யப்பட்ட விளக்கு அறங்களைப்பற்றியும், இரண்டு, சிவயோகி யரை உண்பிக்கச் செய்யப்பட்ட அறங்களைப்பற்றியும், ஒன்று இக் கோயிலில் விழா எடுக்கத் தரப்பட்ட கொடை குறித்தும் பேசு கின்றன.

---

1. ARE 13 of 1908.

முதற்பராந்தகனின் ஆட்சியாண்டு தெரியாத மூன்று கல்வெட்டுகளுள் ஒன்று, காரி விழுப்பரையன் என்பார் திருக்கீழ்க் கோட்டத்து மகாதேவர் கோயிலில் விளக்கொன்று எரிப்பதற்காகத் தொண்ணூற்ருறு ஆடுகளைக் கோயிலாரிடம் தந்த செய்தியைக் கூறுகிறது.[2] இன்னென்று திருக்கீழ்க் கோட்டத்துப் பெருமானடிகள் கோயிலில் இருவருக்கு உணவளிக்கும் அறத்திற்காக, திருக்குட மூக்கு ஊரவையார் நிலமொன்றினை விற்பனை செய்த செய்தியைத் தருகிறது. இக் கல்வெட்டில் தென்கரை நாட்டிலுள்ள கிழார்க் கூற்றத்து ஆயிரத்தளி என்னும் இடத்தின் பெயர் குறிக்கப்பட்டுள்ளது.[3] மூன்ருவது கல்வெட்டு, தென்கரை நாட்டிலுள்ள கிழார்க் கூற்றத்து, ஆயிரத்தளியைச் சேர்ந்த தேவதானமான காவலூர் என்னும் ஊரிலுள்ள வில்லவன் பேரரையன் என்பார் குடந்தைக் கீழ்க்கோட்டத் திருக்கோயிலில் விழாக்கள் நடத்துவதற்காக நூற்றைந்து துளைப்பொன் கொடையாகத் தந்ததைக் குறிக்கிறது.[4]

பராந்தகனின் முப்பத்தெட்டாம் ஆட்சியாண்டுக் கல்வெட்டில் திருநறையூர் நாட்டு அய்யாற்றைச் சேர்ந்த மைஞ்சன் கானவயன் என்பார் இக் கோயிலில் விளக்கொன்று எரிக்கத் தொண்ணூற்ருறு ஆடுகளைத் தந்த செய்தி பொறிக்கப்பட்டுள்ளது.[5] இருபத்தேழாம் ஆட்சியாண்டுக் கல்வெட்டு திருக்கீழ்க்கோட்டத்துப் பெருமானடிகள் கோயிலில் ஒரு விளக்கெரிக்கவும், சிவயோகி ஒருவரை உண்பிக்கவும் நிலக்கொடை தரப்பட்டதைக் கூறுகிறது. இக் கல்வெட்டில் கொடையளித்த பெருமகனின் பெயர் காணப்படவில்லை.[6]

முதற் பராந்தகனின் நாற்பதாம் ஆட்சியாண்டுக் கல்வெட்டுகள் இரண்டனுள் ஒன்று, இக் கோயிலில் விளக்கொன்று எரிக்கத் தொண்ணூறு ஆடுகள் கொடையாகத் தரப்பட்டதையும்,[7] மற்ருென்று, திருக்கீழ்க்கோட்டத்துப் பெருமானடிகள் கோயிலில் விளக்கொன்று எரிக்கவும், சிதாரி புகைக்கவும், அதேசமயம் இக் கோயிலில் உள்ள கதிரவன் திருமுன்னில் இரண்டு விளக்குகள் எரிக்கவும் நிலக்கொடை தரப்பட்ட செய்தியையும் கூறுகின்றன.[8] ௵

2. ARE 237 of 1911.
3. ARE 249 of 1911.
4. ARE 254 of 1911.
5. ARE 250 of 1911.
6. ARE 232 of 1911.
7. ARE 235 of 1911.
8. ARE 253 of 1911.

**கண்டராதித்தனின் கல்வெட்டுகள் :**

முதற் பராந்தகனை அடுத்து ஆட்சிக்குவந்த அவன் மகன் கண்டராதித்தன் கி. பி. 950இல் இருந்து 957 வரை ஏறத்தாழ ஏழாண்டுகள் அரசாண்டதாகக் கல்வெட்டுகள் மூலமாக வரலாற் றறிஞர்கள் கணிக்கிறார்கள்.[9] இக் கண்டராதித்தனின் அருமைத் துணைவியார் தான் கோயில்கள் பல எழுப்பிய அழியாப் புகழ்பெற்ற செம்பியன் மாதேவியார் ஆவார். இக் கண்டராதித்தனின் கல் வெட்டுகள் இக் கோயிலில் இரண்டு இருப்பதாகக் கல்வெட்டறி ஞர்கள் கூறுகிறார்கள். ஆனால் இவ்விரண்டு கல்வெட்டுகளிலுமே மன்னன் பெயர் இராசகேசரி என்றுதான் குறிக்கப்பட்டுள்ளது. மன்னன் பெயர் தெரியாத இராசகேசரிக் கல்வெட்டுகள், இவ்விரண் டையும் சேர்த்து இக் கோயிலில் ஆறு உள்ளன. அவற்றுள் இவ் விரண்டை மட்டும் கண்டராதித்தனுடையதாகக் குறிப்பிடும் கல் வெட்டறிஞர்கள் மற்ற நான்கையும் 'மன்னன் பெயர் தெரியாத' என்றே குறிப்பிடுவது விந்தையாக உள்ளது. இந்த ஆறு கல்வெட்டு களும் இராசகேசரியின் இரண்டாம், மூன்றும், ஐந்தாம், பதினைந்தாம் ஆட்சியாண்டுகளில் வெட்டப்பட்டுள்ளன.

| கல்வெட்டு எண் | ஆட்சியாண்டு |
|---|---|
| 239 | தெரியவில்லை |
| 227 | மூன்றுமாண்டு |
| 228 | ,, |
| 255 | ,, |
| 236 | ஐந்தாம் ஆண்டு |
| 252 | பதினைந்தாம் ஆண்டு |

கல்வெட்டாய்வாளர்கள் கண்டராதித்தனுடையதாகக் குறிக்கும் இராசகேசரியின் இரண்டு கல்வெட்டுகளுமே இம் மன்னனின் மூன்றும் ஆட்சியாண்டில் வெட்டப்பட்டுள்ளன. இவற்றுள் ஒன்று, தஞ்சையைச் சேர்ந்த வீரசோழத் தெரிஞ்ச கைக்கோளர் பிரிவினருள் ஒருவரான குமரன் தூதுவன் என்பார் இக் கோயிலில் விளக் கெரிக்கத் தொண்ணூறு ஆடுகளைத்தந்த செய்தியைக் கூறுகிறது.[10] 'வீரசோழத் தெரிஞ்ச கைக்கோளர்' என்னும் தொடரிலுள்ள வீர சோழன் என்னும் பெயர் முதற் பராந்தகனைக் குறிப்பதால், இக்

9. பிற்காலச் சோழர் வரலாறு, தி. வை. சதாசிவப் பண்டாரத் தார், பக். 59.

10. ARE 228 of 1911.

கல்வெட்டு கண்டராதித்தனுடையதாகலாம் என்று அறிஞர்கள் கருதுவதாய்த் தெரிகிறது. இன்னொரு கல்வெட்டு,[11] பாண்டியப் படையின் செலவினங்களுக்காகத் திருக்குடமூக்கு ஊரவைக்கு மதுரை கொண்ட கோப்பரகேசரியான முதற் பராந்தகன் மூவாயிரம் கழஞ்சுப் பொன்னைத் தண்டம் விதித்த செய்தியையும், ஊரவையார் அரிசிலாற்றில் தங்களுக்குச் சொந்தமாக இருந்த நிலங்கள் சில வற்றைத் திருக்கீழ்க்கோட்டத்துப் பரமசாமியிடம் ஐந்நூறு கழஞ்சுப் பொன்னுக்கு விற்றுத் தண்டத்தின் ஒரு பகுதியைக் கட்டிய செய்தி யையும் குறிப்பிடுகிறது. இது ஐயத்திற்கிடமின்றிக் கண்டராதித்தன் கல்வெட்டெனலாம்.

ஏனைய நான்கு இராசகேசரியின் கல்வெட்டுகளுள், ஆட்சி யாண்டு தெரியாத கல்வெட்டு, இக் கோயிலில் விளக்கொன்று எரிக்கத் தொண்ணூற்ருறு ஆடுகள் தரப்பட்ட செய்தியையும்,[12] மூன்ரும் ஆட்சியாண்டுக் கல்வெட்டு திருக்கீழ்க் கோட்டத்துப் பரம சாமி கோயிலில் சிவயோகி ஒருவரை உண்பிக்கும் பொருட்டுத் தஞ்சையைச் சேர்ந்த அரையன் கலங்காமலே என்ற வேளாளருக்குத் திருக்குடமூக்கு ஊரவையார் நிலமொன்றினை விற்பனை செய்த செய்தியையும்,[13] ஐந்தாம் ஆட்சியாண்டுக் கல்வெட்டு இக் கோயிலுக்குக் காணிக்கைகள் செலுத்துவதற்காக எழுபது ஈழக் காசுகள் தரப்பட்ட செய்தியையும் இதையளித்தவன் வீரசோழத் தெரிஞ்ச கைக்கோளர் பிரிவினன் என்றும்[14] கூறுகின்றன.

(தொடரும்)

---

11. ARE 225 of 1911.
12. ARE 239 of 1911.
13. ARE 227 of 1911.
14. ARE 236 of 1911.

---

## நன்றி

சென்னை, சாந்தி தியேட்டரின் மேலாளர் உயர்திரு. கே. வேணுகோபால் அவர்கள் தம்முடைய அன்னையார் திருமதி துரைக் கண்ணம்மாள் அவர்களின் நினைவாக மறைமலையடிகளார் நூலகத்திற்கு மாதந்தோறும் ரூ. 25/- நன்கொடையாக வழங்க முன்வந்து, முதல் தவணையாக இம்மாதம் (பங்குனி) நன்கொடை ரூ. 25/- அனுப்பியுள்ளார்கள் என்பதை மகிழ்ச்சியோடு தெரி வித்துக்கொள்வதோடு, திரு. வேணுகோபால் அவர்களின் இத்தகு பயனுள்ள அறப்பணிக்காக அன்னருக்கு எமது உளமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்ளுகிரேம்.

—ஆசிரியர்

# பாடத்திட்டத்தில் மாற்றம் தேவை

அன்புடையீர், வணக்கம்.

செல்வியின் 1984 செப்டம்பர்த் திங்கள் இதழில் வெளியாகிய "பட்டப்படிப்பில் தமிழ் மொழிப் பயிற்சியும் இலக்கியமும்" என்னும் எனது கட்டுரையைப்பற்றி அறிஞர்கள் தங்களது கருத்துகளை எழுதி யனுப்புமாறு தாங்கள் வேண்டுகோள் விடுத்திருந்தீர்கள். ஆனால், காரைக்கால் கல்லூரியில் பணியாற்றுகின்ற ஒரே ஒரு பேராசிரியர் மட்டும் எனது கருத்திற்கு எதிர்ப்புத் தெரிவித்துள்ளார். அவரும் பட்டப்படிப்பில் தமிழிலக்கியம் கற்பிக்கக் கூடாது என்பது பிழைபட்ட கருத்து என்று சொல்வதோடு நிறுத்திக் கொண்டார். தக்க காரணங்களைக் காட்டி என் கருத்தை அவர் மறுக்கவில்லை.

என் கருத்தை மறுக்க இயலாத நிலையில் அறிஞர் இருப்பரே யானல், அவ்வாறு எழுதியனுப்புவதோடு, பாடத்திட்டத்தில் மாறுதல் தேவை என்பதை அவர்கள் வெளிப்படையாக ஒப்புக் கொண்டு, அவ்வாறே தெரிவித்திருக்க வேண்டும்.

என் கட்டுரையை நான் 1984 பிப்ரவரியில் எழுதினேன். நாவலர் வேங்கடசாமி நாட்டார் நூற்றண்டு விழாவில் வெளியிடுவதற்காக. ஆனல், விழா மலர் 1985 ஏப்ரலில்தான் வெளிவரும் என்பதை அறிந்து விழா மலருக்கு வேறு கட்டுரையை எழுதியனுப்பலாம் என்று எண்ணி, நமது கவனத்திலுள்ள கட்டுரையைச் செல்விக்கு அனுப்பினேன். இலயோலாக் கல்லூரியில் நடந்த கருத்தரங்கைப் பற்றித் தங்கள் தலையங்கத்தின் வாயிலாய்ச் செப்டம்பர்த் திங்களில் தான் அறிந்தேன். எனது கட்டுரையில் நான் சொல்லியுள்ள கருத்தை - அஃதாவது, பட்டப்படிப்பில் தமிழ் இலக்கியம் கட்டாயப் பாடமாய் இருத்தல் கூடாது என்பதை—நான் ஆசிரியக் கல்லூரி முதல்வனுய் இருந்த காலத்திலிருந்தே சொல்லி வந்துள்ளேன். 1984 சனவரியில் இப்போதுள்ள பாடநூல்கள் சிலவற்றைப் பார்க் கும் வாய்ப்புக் கிடைத்தபோது, எனது கருத்து வலுப்பெற்றது.

தமிழகப் பல்கலைக்கழகத் துணைத் தலைவர்களுக்கு என் கட்டுரை யின் படிகளை இப்போது அனுப்பி வைத்தால், அவர்கள் இப்பொருள் பற்றி எண்ணத் தொடங்குவார்கள் என்றும், அதனல் பாடத் திட்டத்தில் சீர்திருத்தம் ஏற்படக்கூடும் என்றும் நான் நம்புகிறேன்.

அன்பன்

மு. ரா. பெருமாள்

# பக்தி நெறி என்பது பாமரரின் நெறியா?

[பேராசிரியர் மா. சண்முகசுப்பிரமணியம்]

**பக்தி நெறியின் பாங்கு :**

''இறைவனை எய்துவதற்கான நெறிகள் ஞானநெறி, கரும நெறி, பக்தி நெறி என்று உள்ளன. இயற்றுள், சாதாரண மக்களுக்கு ஏற்றது பக்தி நெறியே ஆகும்''.

இவ்வாறு சமயப் புலவர்கள் பலரும் பேசுகின்றனர், எழுதுகின்றனர்.

இந்தக் கூற்று உண்மையானதா என்பதுபற்றி நம்மில் பலரும் சிந்திப்பதில்லை. ''மிகவும் கற்றறிந்த ஞானிகளும் யோகிகளும் அவரவர்களுக்கு ஏற்ற மார்க்கங்களை மேற்கொள்ளுகின்றனர்; ஆனால், நம்மைப் போன்ற சாதாரண மக்களுக்குப் பக்தி மார்க்கம் தான் இயலுவதாக உள்ளது'', என்று நாமும் கருதுகிறோம்!

ஒரு சிறிது சிந்தித்தால் போதும், இக் கூற்று எவ்வளவு தவறுனது, இறையுணர்வுக்கு எவ்வளவு முரணுனது என்பதை நாம் எளிதில் புரிந்து கொள்ளலாம்!

தேவார திருவாசக திவ்யப் பிரபந்தப் பாடல்களில் நாயன்மார்களும் ஆழ்வார்களும் மீண்டும் மீண்டும் வலியுறுத்தி நமக்கு உணர்த்தும் பேருண்மை என்ன? இறைவனை எய்துவதற்கு உற்ற நெறி ஒன்றே ஒன்றுதான், அது ''பக்தி நெறி'', ''அன்பு நெறி'' என்பதே யாகும். பக்தி நெறியன்றிப் பரமனை எய்துதல் இயலாது என்பது அவர்கள் உறுதிப்பாடு.

இறைமைபற்றிய இப் பேருண்மையினை இனிய தமிழிலே எத்தனையோ இடங்களில் அடியார்கள் எடுத்துக் கூறுகின்றனர், இடித்துக் கூறுகின்றனர்! இருப்பினும், நம் !வன் செவிகளில் அது ஏறவில்லை!

ஏன்? காரணம் இதுதான். மெய்யடியார்கள் இறைமை ஞானத்தை இன் தமிழில் பாடி விட்டார்கள். மேலும், தங்கள் அருட்பாடல்களை ''செந்தமிழ் மாலை'' என்றும், ''ஒண் தமிழ்கள்''

என்றும், ''தண் தமிழ்கள்'' என்றும், ''தமிழாயிரம்'', ''பாலோடு அமுதன்ன ஆயிரம்'', ''பண்ணுர் தமிழாயிரம்'' என்றும் சிறப் பித்துக் கூறியுள்ளார்கள்.

இணையற்ற இறைமை ஞானத்தை எளிய தமிழிலே எவ்வாறு கூற முடியும்? தெரியாத மொழியில் புரியாத வகையில் இருந்தால் தானே அது உயர் ஞானமாக இருக்கமுடியும்? எனவே, அடியார்கள் அருளியுள்ள பாடல்கள் ஏதோ தோத்திரப் பாடல்கள், அடிநிலையில் உள்ளோர்கள் ஆண்டவனைக் குறித்து அவர்கள் மொழியில் துதிப் பதற்கான பாடல்கள், பக்குவ நிலை அடையாத பாமரர்களுக்கு ஏற்ற பாடல்கள் என்று நம்மில் பெரும்பாலோரும் கருதுகிறோம்!

இவ்வாறு, இறைமை நலம் தோய்ந்த இன் தமிழ்ப் பாக்களின் ஏற்றத்தினை உணராத ஈனர்களாக நாம் ஆகி விட்டோம்! பொன்னுர் தமிழின் பொற்பினை உணராத புல்லர்களாகி விட்டோம்!

இந்த இழிநிலைக்கு நாம் இறங்கி விடுவோம் என்பதை அன்றே அறிந்திருந்த அடியார்கள், தங்கள் அருட்பாடல்களின் அருமை யினை அழுத்தமாகக் கூறியுள்ளார்கள்.

**இன் தமிழ்ப் பாடல்கள் இறைமைப் பாடல்கள் :**

சின்னஞ்சிறு வயதிலேயே சிவஞானப்பால் அருந்தி சிவஞானம் பரப்பிய திருஞான சம்பந்தர், தம் வாக்குகள் அனைத்தும் இறைவன் வாக்குகள் என்று கூறுகின்றுர்.

''எனது உரை தனது உரையாகக் கொண்டவன் இறைவன்'', எனறு பாடுகின்றுர்.

*''நீருளான் தீயுளான் அந்தரத்துள்ளான்*
*நினைப்பவர் மனத்துளான் நித்தமாஏத்தும்*
*ஊருளான் எனதுரை தனதுரையாக*
*ஒற்றை வெள்ளேறுகந்து ஏறிய ஒருவன்''*

திரு இலம்பையக் கோட்டூர் பதிகத்திலுள்ள பத்துப் பாடல் களிலும் ''எனதுரை தனதுரையாகக் கொண்டவன் இறைவன்'', என்று நமக்கு உணர்த்துகின்றுர் சம்பந்தப் பெருமான்.

திருவாசகம் அருளிய மணிவாசகர், ''சிவன் என் சிந்தையுள் நின்று இயக்குவதால், அவன் அடிகளை வணங்கி, அவன் அருள் பெற்று, ''சிவபுராணம் என்ற பாடலை உரைக்கிறேன்'', என்று திருவாசகத்தின் முதற் பாடலிலேயே கூறுகின்றுர்.

"சிவன் அவன் என் சிந்தையுள் நின்ற அதனுல்
அவன் அருளாலே அவன் தாள் வணங்கி
சிந்தை மகிழச் சிவபுராணம் தன்னை
முந்தை வினைமுழுதும் ஓய உரைப்பன் யான்"
—(சிவபுராணம்)

சிவம் நிறைந்த சிந்தையுடன் இசைக்கப்படும் பாடல் சிவன் அருளும் பாடல் தானே ?

திருவாய் மொழி அருளியுள்ள நம்மாழ்வார், "என் நெஞ்சத்தில் இருக்கும் இறைவன்தான் இத் தமிழ் நூலை மொழிகின்றுன்", என்று தெளிவாகப் பாடுகின்ருர் :

"என் நெஞ்சத்து உள்ளிருந்து
இங்கு இருந்தமிழ் நூல் இவை மொழிந்து
..........................." —(10-6-4)

"இறைவன் என்னைக் கருவியாக்கி இன் தமிழில் தன்னைப் பாடிக் கொண்டான்", என்று அவர் நமக்கு உணர்த்துகின்ருர்.

"......என்னைத் தன்னுக்கி என்னுல் தன்னை
இன் தமிழ் பாடிய ஈசனை........." (7-9-1)

என்னைத் தாளுக ஆக்கிக் கொண்டான்; என் வழியாகத் தன்னைத்தானே பாடிக் கொண்டான் இறைவன். இவ்வாறு இறைவனே பாடிய பாடல்கள்தாம் திருவாய்மொழி, என்கிருர் நம்மாழ்வார்.

"..................
ஏர்வுஇலா என்னைத் தன்னுக்கி என்னுல் தன்னைப்
பார் பரவு இன்கவி பாடும்—பரமரே" (7-9-5)

இதைவிடத் தெளிவாக எப்படிக் கூற முடியும் ?

எனவே, தேவார திருவாசக திவ்யப்பிரபந்தப் பாடல்கள் இறைவன் அருளிய பாடல்கள் ! ஈடில்லாத இன் தமிழில் இறைவனே இசைத்த பாடல்கள் ! ஒப்பற்ற ஒண் தமிழ்கள் !

இந்த உண்மையினை உறுதியுடன் நம் மனத்திலே கொள்ள வேண்டும். இல்லையேல் ஞான சம்பந்தரையும் நம்மாழ்வாரையும் நம்பாத பெரும் பழிக்கும் பாவத்திற்கும் நாம் ஆளாவோம்.

அருளாளர் போப்பின் அறிவுரை :

அனைத்துலக ஆன்மீக இலக்கியங்களுள் நம் இன் தமிழ் நூல் களைப்போல் இறைமையினை எளிதாகவும் தெளிவாகவும் உணர்த்தும் வேறு நூல் எதையும் காண்பது அரிது.

ஆதலால்தான், ''திருவாசகம்'' என்ற சொல்லைக் கேட்டாலே தம் கண்களிலே நீர் அரும்பி விடுகிறது என்று கூறியுள்ளார், மணி வாசகத்தை மாசறக் கற்றுணர்ந்த அருளாளர் G. U. போப்.

தாம் ஆங்கிலத்தில் வடித்த திருவாசக நூலின் முன்னுரையில் மேலைநாட்டுப் பாதிரியாரான அவர் கூறுகின்றார் :

''வழக்கொழிந்து மாண்டு போன மொழிகளாலும் பயன் மிக உள்ளது. சாம்பலின் தணல்போல் அவற்றின் தன்மை வாழ்கின் றது. ஆயினும், இன்றும் வாழும் பண்டைய மொழிகளே சிறப் புடையன. வைரம் பாய்ந்த அம் மரங்களிலிருந்து பூக்க இருக்கும் மலர்கள் எத்தனையோ! பழுக்க இருக்கும் கனிகள் எத்தனையோ! எனவே, தமிழர்கள் தங்கள் மொழி குறித்துக் கொண்டுள்ள தாழ்வு மனப்பான்மையினை ஒழிக்க வேண்டும்''.

மொழிச் சார்பு இல்லாத அயல் நாட்டு அருளாளர் கூறும் அறிவுரை இது !

ஏறத்தாழ நூறு ஆண்டுகளுக்கு முன் அந்தப் பெரியார் கூறிய இந்த அறிவுரை இன்றைய தமிழர்களுக்கும் பொருந்துவதாகும்.

இந்தத் தாழ்வு மனப்பான்மையால்தான் தமிழிலுள்ள ஒப்பற்ற உயர் ஞானத்தை உணராமல் நாம் இன்றும் இருக்கின்றோம் !

* * * *

பத்தி நெறி ஒன்றே உற்ற நெறி :

பக்தி நெறி ஒன்றுதான் பரமனை எய்துதற்கு உற்ற நெறி என் பதை ஒண்தமிழ்கள் ஓயாது ஓதும் பாங்கினை ஓர்ந்து காண்போம் :

ஆண்டவன்மீது அளவில்லாத அன்பு கொண்டு, அகம் நெகிழ்ந்து, உள்ளம் உருகி, ஒளி பெருகி நிற்பதைத்தான் ''அன்பு நெறி'' அல்லது ''பக்தி நெறி'' என்கின்றனர் அடியார்கள்.

இறைவனை நினைந்து உருகி நிற்பவர்களுக்கு அல்லாது வேறெவர்க்கும் எதுவும் கைகூடுவதில்லை, என்கிறது ஞானசம் பந்தரின் ஞானத் தமிழ் :

''வெரு குரிஞ்சு வெங்காட்டில் ஆடிய விமலன் என்று உள்கி
உருகி நைபவர்க் கல்லால் ஒன்றும் கைகூடுவதன்ருல்''
(திருநெல்வாயிலரத்துறை)

அன்புடன் இறைவனை ஏத்துவோர்களைத் தவிர வேறு எவரும் இறைவன் திருவடிகளை எய்துதல் இயலாது. என்று பாடுகிறது சுந்தரரின் சுந்தரத் தமிழ் :

''அன்பரல்லால் அணிகொள்கொன்றை அடிகள் அடிசேரார்''
(திருஎதிர்கொள்பாடி)

அப்பரடிகளின் அருந்தமிழ் அறைகின்றது இவ்வாறு :

''உருகாதார் உள்ளத்து நில்லார் போலும்
உகப்பார்தம் மனத்தென்றும் நீங்கார் போலும்''
(திருவாரூர்)

''...........அம்மானை அள்ளூறிய
அன்பினுல் நினைந்தார் அறிந்தார்களே.''
(திருஅன்பிலாலந்துறை)

''அன்பினில் விளைந்த ஆரமுதாக'' இறைவனைக் காணும் மணிவாசகர்,

''என்பு நைந்து உருகி நெக்கு நெக்கு ஏங்கி
அன்பு எனும் ஆறு கரையது புரள''　　　　(4 : 80-81)

வேண்டும் என்கிருர்.

''அன்போடு உருகி அகங்குழைவார்க்கு அன்றி
என்போல் மணியினை எய்தவொண்ணுதே''
(திருமந்திரம். 27)

என்று அறுதியிட்டுக் கூறுகின்ருர் திருமூலர்.

அன்பரன்றி எவராலும் இறைவனைக் காண இயலாது என்கிருர் திருமழிசைப்பிரான்.

''என்பில் எள்கி நெஞ்சுருகி உள்கனிந்து எழுந்ததோர்
அன்பிலன்றி ஆழியானை யாவர் காண வல்லரே ?''
(திருச்சந்த விருத்தம்)

ஞானச் சுடர் விளக்கான இறைமை ஒளி இதயத்தில் இலங்கும் திறத்தினை ஞானத் தமிழில் நவிலும் பூதத்தாழ்வார் புகல்கின்ருர் :

"அன்பே தகளியா ஆர்வமே நெய்யாக
இன்புருகு சிந்தை இடுதிரியா—நன்புருகி
ஞானச் சுடர்விளக் கேற்றினேன், நாரணற்கு
ஞானத் தமிழ்புரிந்த நான்." (இரண்டாம் திருவந்தாதி)

ஞானத்தால் மட்டுமே இறைவனை அணுக இயலாது; உள்ளம் கனிந்தால்தான் இன்பமான இறைவனை எய்த இயலும், என்பது நம் மாழ்வார் வாக்கு:

"இனியார் ஞானங்களால் எடுக்கல் எழாத எந்தாய்!
கனிவார் வீட்டு இன்பமே! என் கடல்படா அமுதே!''
(2-3-5)

பக்தர்களுக்கு மட்டுமே இறைவன் எளிமையானவன், பிறர் களுக்கு அவன் அரியவன், அகப்படாதவன், என்ற உண்மையினை ஓயாது உரைக்கின்றன திருவாசகமும் திருவாய்மொழியும்.

சித்தமும் செல்லமுடியாத தூரத்தில் உள்ள இறைவன் பக்தி வலையில் அகப்படுகிறான் என்கிறார் மணிவாசகர் :

"சித்தமும் செல்லாச் சேட்சியன் காண்க,
பக்தி வலையிற் படுவோன் காண்க.'' (திருவண்டப் பகுதி)

இவையனைத்துமே இறைமை ஒளி செறிந்த இதயங்களில் எழுந்த இன்தமிழ்கள்; பரமனை பாடிய பண்ணார்ந்த தமிழ்கள். அன்பு நெறி ஒன்றே ஆண்டவனை அடைவதற்கு உற்ற நெறி என்று உரைக்கின்றன இவை.

கண்ணன் காட்டும் நெறி :

பார்த்தனுக்குப் பரமஞானத்தைப் புகட்டிய பரம்பொருள் பகவத் கீதையில் பகர்வது என்ன?

தனது பேருருவத்தைக் (விசுவரூபத்தை) காட்டிய பெம்மான் கண்ணன், காண்டீபனிடம் கூறுகின்றான் :

''அர்ச்சுனா! நீ இப்பொழுது கண்ட இந்த விசுவரூபத்தை இதற்குமுன் எவரும் கண்டதில்லை, எவர்க்கும் அது காட்டப்பட்டது மில்லை.

''வேதங்களை ஓதுவதாலோ வேள்விகளை இயற்றுவதாலோ, தானங்கள் தருவதாலோ தவங்கள் புரிவதாலோ, எனது இவ் வுருவத்தை எவரும் காண்பது இயலாது;

''ஒருமனப்பட்ட பத்தியால்தான் என்னை இவ்வாறு உணர்ந்து காண்பதற்கும் என்னுடன் உறவாடுவதற்கும் இயலும்;

''பாண்டவனே! என்பணி செய்பவனுய், என்னையே மதிப் பவனுய், பற்று ஏதுமின்றிப் பக்தி நெறி நிற்பவனுய் உள்ளவன் எவனே அவன் மட்டுமே என்னை அடைகிருன்.'' (அத்தியாயம் 11)

விமலனின் விசுவருபத்தை, அண்டங்களனைத்தையும் கடந்து பெருவெளியெங்கும் பெருகித் தோன்றும் அந்தப் பேருருவத்தைப் பக்தன் மட்டுமே காணமுடியும் என்றும், பற்று ஏதுமின்றிப் பக்தி செய்பவன் மட்டுமே இறைவனை எய்த முடியும் என்றும் பகவத் கீதையில் பரம்பொருளே போதிக்கும் பரமஞானம் இது!

இனி என்ன ஐயப்பாடு நமக்கு இருக்க முடியும்?

அன்பர்களே! அன்பு நெறி ஒன்றே ஆண்டவனை எய்துதற்கு உற்ற நெறியாகும், ஒரே நெறியாகும் என்ற உண்மையினை உறுதி யாக உள்ளத்திற் கொள்வோமாக.

இன்னும், இதுபற்றிச் செந்தமிழ்கள் கூறும் சீர்மையினைக் காண்போம்.

(தொடரும்)

---

## 'தமிழர் இசை' நூல் வெளியீட்டு விழா

அருளிசைமணி சு. வே. சுப்பிரமணியன் பாடிய தமிழிசைப் பாடல்கள் வெளியீட்டு விழா 18—3—85இல் தேவநேயப் பாவாணர் மாவட்ட மைய நூலகக் கருத்தரங்கறையில், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தின் சார்பில் மாண்புமிகு முனைவர் ம. பொ. சிவஞானம் அவர்கள் தலைமையில் நடை பெற்றது. மாண்புமிகு அமைச்சர் செ. அரங்கநாயகம் அவர்கள் நூலினை வெளியிட, முனைவர் எம். ஏ. எம். இராமசாமி அதனைப் பெற்றுக்கொண்டார். முனைவர் ஔவை து. நடராசன் சிறப்புரை ஆற்றினுர். மற்றும் அறிஞர் பலர் வாழ்த்துரை வழங்கினர். முனைவர் ஏ. என். பெருமாள் அவர்கள் நன்றி நவில விழா இனிது நிறைவுற்றது.

# எண்மர் எண்மணி மாலை

[மருத்துவர் மறையரசன்]

(முன் இதழ் உ௪0ஆம் பக்கத் தொடர்ச்சி)

9.1. வீரமாமுனிவர் :

(வெண்பா)

நகைச்சுவை தந்து முகையவிழ்க் கின்ற
வகையொடு பாவில் வடித்து—தகையாய்ப்
பரமார்த்த சீடர் கதைதருங் கோவே
உரமாகி நிற்கும் உயர்ந்து.

9.2. பரிதிமாற் கலைஞர் :

(அகவல்)

உயர்ந்த மொழியென ஓங்கிய தமிழாய்ப்
பயந்த மூன்றனுள் படுத்தது நாடகம்
நலிந்த நாடகம் நலம்பெற வேண்டி
புலியெனப் போந்து புதுமை கண்டனன்
'ஞான போதினி' தாளிகை நடத்தி
வானம் தொட்ட வல்லவன் நாடக
ஆசான், பாவலன் அருந்தமிழ் நாவலன்
தூசாம் ஆரிய வடமொழி எதிர்ப்பவன்
ஆரிய பிறப்பினன் ஆயினும் மாறிய
சூரிய நாரா யணனே நமக்கு
மறைமலை முருகன் தந்தனன்
குறையிலாத் தமிழும் குலமகன் அருளே!

9.3. மறைமலையடிகள் :

(கட்டளைக் கலித்துறை)

அருட்பா மருட்பா அரும்போர் தனில்கூர் அறிவினாலே
விருப்போ வெறுப்போ இலாமற் கதிரையர் வென்றவரே
இருப்பாய் குறிஞ்சி குறளொடு முல்லை இவைதிரட்டித்
தரும்பெரு வீர தமிழ்மதம் நிற்கும் தலைநிமிர்ந்தே.

**9.4. பாவேந்தர் :**

(வஞ்சி விருத்தம்)

தலையே நிமிர்ந் திடுவாள்தமிழ்
தரமோங்குவை தமிழா !
விலையே இலா கனியின்சுவை
தமிழைத்தொழ எழுடா !
கலைமேடைகள் முதல் யாவையும்
தமிழோங்கிடத் தாமே
நிலையாய்த் திகழ் சுவைப்பாத்தமிழ்
இயக்கந் தொடர்வோமே !

**9.5. பாவாணர் :**

(அறுசீர் ஆசிரிய விருத்தம்)

தொடர்கின்ற முறையாவும் சரியென்றே
யெண்ணுகின்ற தூய உள்ளம்
படர்கின்ற பிறமொழியால் பான்மைகெடும்
தமிழென்று பார்த்த றிந்தால்
இடர்வந்து சேர்ந்திடுமோ ! இனியதமிழ்
கலப்பின்றி என்றும் ஓங்கி
அடர்ந்திடுமே; அன்றுவரை ஓய்ந்திடுமோ
பாவாணர் அயரா நாவே !

**9.6. வ. சுப்பையா (பிள்ளை) :**

(மருட்பா)

நாவிரியச் செந்தமிழும் நற்சமயம் ஏற்றுகிற
பூவிரியும் பேரவைச் செம்மலினைக்—காவிரித்தாய்
கண்டனள் மகிழ்ந்து கொண்டமிழ்த் திடையில்
முண்ட வைரமுத்துங் காத்திடக்
கொண்டவள் சினமே குளிர்வதும் உண்டோ?

**9.7. பண்ணாய்வாளர் :**

(சிந்து)

உண்டெனச் சொல்லாதீர்—இசை
உண்டெனச் சொல்லாதீர்—இன்பம்
மண்டு தமிழில்
மற்றவை கலந்ததும்
நன்றெனச் சொல்லாதீர்—தீந்தமிழ்
குன்றிடச் செய்யாதீர்

மக்கள் இசையாமோ—முனகல்
முக்கல் இசையாமோ ?—தாளம்
தக்கபண் ணில்லாத தமிழிலா கத்தலும்
குக்கல் குரைப்பன்றே வெறுத்தொ
துக்கல் முறையன்றே !

பண்ணை ஆய்ந்திடு வோன்—சுந்தரன்
பண்ணை ஆய்ந்திடுவான்
தன்னை மறந்திந்தத் தீந்தமிழ் நாட்டின்
பண்ணை சார்ந்திடுவான்—அவன்வழி
கண்ணைச் சேர்ந்திடுவோம்.

இசையைக் கொண்டறிவோன்—ஞாயிறாய்
இசைத்துக் கண்டறிவோன்
திசையே மாறிப் போன தமிழிசை
அசைத்துக் கண்டறிவான்—கொள்கை
அசைந்து கண்டறியேன்.

## 9.8. பாவல ரேறு :

(கலி வெண்பா)

கண்டறிந்த நாள்முதலாய் தென்றல் குளிர்மொழியைக்
கொண்டுவுரை யாற்றுகின்ற கொள்கையன்—கண்ணற்று

மேன்மைக் கருத்தற்று மெய்யான மானமற்று
உண்ணற் குடுத்தற்கும் மாண்பற்று—மண்ணற்ற

நம்மினத்தின் கீழ்மை நிலைவுற்று நோக்குபவன்
தம்மனத்தால் பாவாணர் தாங்குபவன்—செம்மையாய்

கள்ளமிலா நெஞ்சோடு குள்ளமிலாக் கொள்கையால்
வெள்ளமெனும் சொற்பெருக்காய் நூல்தருவோன்
[வெள்ளையாய்

கொய்யாக் கனியெடுத்துப் பாவேந்தர் பால்தந்து
உய்ய அணிந்துரையும் ஊரறிய மெய்யாகப்

பெற்று வரும்பெரியன் நீசிறுவன் என்றுசொன்ன
முற்றும் முறைமாற்றி மேன்மையைப் போற்றும்

வகையாகப் பாதந்த பாவலரின் ஏறு
தகையான தண்டமிழ்த் தொண்டன்—மிகையில்லை

இங்கிவனைப் போற்றி இவன்வழியில் நாம்நடந்தால்
தங்கும் தனித்தீந் தமிழ்.

———

# பேராசிரியர் மடல்

மார்ச்சு, 1985 'செந்தமிழ்ச் செல்வி' இதழில் தமிழ்ப் பேராசிரியர் திரு. ந. சஞ்சீவி அவர்களின் மடலைக் கண்ணுற்றேன். அதில் அவர் குறிப்பிட்டுள்ள 'மயன் நாகரிகம்' உண்மையில் நம் திராவிட நாகரிகமே என்பதை யான் தெரிவித்துக்கொள்ள விழைகிறேன். குமரிக் கண்ட மாந்தர் முன்னாளில் எவ்வாறு பல கண்டங்களுக்கும் பரவிச் சென்றனர் என்பதைக் 'கருணாமிர்த சாகரம்' எனும் இசை ஆராய்ச்சி நூலில் தஞ்சை ஆபிரகாம் பண்டிதர் நன்கு விளக்கியுள்ளார். அவ்வாறு தென் அமெரிக்காவுக்குச் சென்ற திராவிடப் பெருங்குடியினர்தாம் ஆங்கே வளமையான மயன் நாகரிகத்தை நிறுவினர். அவர்கள் வானவியலிலும் சிறந்து விளங்கினர்.

அது திராவிட நாகரிகம் என்பதற்கான சான்றுகளும் உள்ளன. 'மயன்' என்பதே தமிழ்ச் சொல்லாய் இருக்கக் கூடும்! பின்னாளில் தென் அமெரிக்காவுக்குச் சென்ற வெள்ளையர் கொடுமையான வகையில் அந்த நாகரிகத்தை அழித்துவிட்டனர். இந்திய வரலாற்றாசிரியர்களும் தமிழ்ப் பேராசிரியர்களும் சிந்துவெளி நாகரிக ஆராய்ச்சியோடு நின்றுவிடாமல், உலகின் பல கண்டங்களிலும் எஞ்சியுள்ள பழங்குடி மக்களின் பண்பாடு, மொழி ஆகியவற்றை ஆராய முற்படவேண்டியது இன்று மிகமிக இன்றியமையாததாகும். அப்பொழுது மேலும் பல உண்மைகள் வெளியாகும் என்பது உறுதி.

மயன் நாகரிகத்தை அழித்த கொடியவரின் அண்டைநாட்டினரான போர்ச்சுகீசியர் முதன்முதலில் இந்தியாவுக்குள் நுழைந்தபோது, அதேபோன்று அழிவு வேலையை இங்கும் புரிந்துள்ளனர் என்பதை இவண் எடுத்துக்காட்டுவது மிகவும் பொருத்தமாயிருக்குமெனக் கருதுகிறேன். அதுகுறித்து வரலாற்றாசிரியர் ஒருவர் பின்வருமாறு குறிப்பிடுகிறார் :

"Of the 5 foreign nations who came into contact with India from the 16th century, the Danes were negligible, the Duch commercially powerful for a time but with no impact on Indian art, the French keenly interested in it, and the British, of course, considerably involved with it. None of these four peoples did any deliberate harm to Indian monuments. But the Portuguese vented their wrath upon them wherever they could.........There were a few Portuguese them-

selves who deplored the bigotry, but nobody in authority listened to them. Fernao Mendez Pinto, who travelled in the most difficult parts of Asia between 1539 and 1558 described 'the fearful atrocities and inhuman lust for blood which characterised the conduct of the Portuguese in their subversion of overland trade route.' But nobody in Europe believed him. His account of Portuguese cruelty was, it must be admitted, too horrible to be believed, and yet we know from other sources that it had at least a substratum of truth."

—N. S. Ramaswami,
"Indian Monuments"
(Abhinav Publications, New Delhi, 1979.)

ப. தண்டபாணி
இசை ஆராய்ச்சியாளர்

———

## நீடாமங்கலம் இலக்கிய வளர்ச்சிக் கழக 5ஆம் ஆண்டு நிறைவுவிழா

நீடாமங்கலம் இலக்கிய வளர்ச்சிக் கழகத்தின் 5ஆம் ஆண்டு நிறைவு விழா சென்ற திங்களில் மிகச் சிறப்பாக நடைபெற்றது. முதல் நாள் மழலைகள் அரங்கமாகவும், இரண்டாம் நாள் சிறுவர்கள் அரங்கமாகவும், மூன்றும் நாள் நிறைவு விழாவாகவும் நடைபெற்றன.

முதல் நாள் விழா, முன்னுள் சார்பதிவாளர் திரு. செ நடராசன் அவர்கள் தலைமையிலும், இரண்டாம் நாள் விழா முன்னுள் ஊராட்சி ஒன்றியப் பெருந்தலைவர் இரா. பாலசுப்பிரமணியம் அவர்கள் தலைமையிலும், மூன்றும் நாள் விழா, மாநில வயதுவந்தோர் கல்வித் திட்ட அலுவலர் கோ. அப்பாசாமி அவர்கள் தலைமையிலும் நடைபெற்றன. அறிஞர் பலர் உரையாற்றினர். டாக்டர் திரு. வேதராசன் விழாக்கள் சிறப்பாக நடைபெற ஏற்பாடுகள் செய்திருந்தார். திரு. கு. ஆறுமுகம் நன்றிநவில விழா இனிது நிறைவேறிற்று.

# குறிஞ்சிப்பாட்டில் வரும் செடிகொடி மரப்பெயர்கள்

[பி. எல். சாமி, இ. ஆ. ப. (ஓய்வு)]

[முன் இதழ் உகூரு-ஆம் பக்கத் தொடர்ச்சி]

ஆவிரை பாழ்நிலைகளிலும் வறட்சியான பகுதிகளிலும் வளரும். இது யாவர்க்கும் தெரிந்ததொன்றே. இதை அறிவியலில் Cassia auriculata என்றழைப்பர்.

வேரல் என்பது சிறிய மூங்கில் என்று அழைக்கப்பட்டுள்ளது. நீலகிரிச் சாரல்களில் புதர் போல் வளரும். நற்றிணையில் (232) சோலையில் குன்றில் வாழ்ந்த மக்கள் வேலியாக வளர்த்தனர் என்று கூறப்பட்டுள்ளது. இதை Arundunaria wightiana என்று அறிவியலில் அழைப்பர்.

சூரல் என்பது இக்காலத்தில் சூரை என்று அழைக்கப்படுவதாகும். சூரை என்ற பெயர் மலையாளத்திலும் கன்னடத்திலும் வழங்குகின்றது. இதை அறிவியலில் Zizhyphus Oenofolia என்றழைப்பர்.

குரீஇப்பூளை என்பது பூளையில் சிறியதாகும். இதை மலையாளத்தில் செறுபூளை என்றழைப்பர். மலையாளத்தில் பூளை என்பது காட்டிலவு என்ற பெரிய மரமாகும். அதிலிருந்து வேற்றுமைப்படுத்தவே செறுபூளை என்று அழைத்தனர். சிறுபூளையைத் தமிழ்நாட்டில் சடங்குகளில் பயன்படுத்துவர். இதை அறிவியலில் Aerua lanata என்றழைப்பர்.

குறுநறுங்கண்ணி குருகிலை மருதம் குருசிலை முருக்கிலை என்று உரையாசிரியர் கூறியுள்ளார். உரையாசிரியர் "குறுநறுங்கண்ணி குறுகிலை மருதம்" (வரி 72-73) என்பதை மூன்று செடிகளாகக் கொண்டார். இந்த வரியே மருதம் என்ற மரத்தைக் குறிக்கும் என்று கருதலாம். ஏனென்றால் மருதத்திற்கு நீண்டு குறுகிய இலைகளும் கண்ணி போன்ற பூக்களும் உள்ளன. மருதம் என்று அழைக்கப்படும் மரம் மிக அழகிய இளஞ்சிவப்பு பூக்களையுடையதாகும், இந்த மரம் பூக்கும்போது கண்கொள்ளாக் காட்சியாக இருக்கும். மருதம் கொத்தாகப் பூக்கும். அறிவியலில் இதற்குப் பூக்களின் அரசி என்ற பொருளில் பெயர் உள்ளது.

அறிவியலில் இதை Legerstromia flos-regina என்றழைப்பர். Queens flower என்று ஆங்கிலத்தில் அழைப்பர்.

கோங்கம் என்பது ஒரு மரம். இலைகளை உதிர்த்து விட்டு இது பூக்கும் போது மிக அழகிய காட்சியாக இருக்கும். பளபளப்பான மஞ்சள் தட்டுப் போல. பூக்கள் மிக அழகாக இருக்கும். குறிஞ்சிப் பாட்டில் கூறப்பட்ட மரங்களில் மருதமும் கோங்கமும்தான் மிக அழகிய பூக்களை உடையன. இதை அறிவியலில் Cochlospermum gossypium என்றழைப்பர்.

போங்கமும் திலகமும் அடுத்துக் கூறப்பட்டுள்ளன. இதற்கு உரை கூறிய நச்சினார்க்கினியர் இவை இரண்டிற்கும் ஒரே பொருள் கூறியுள்ளார்: போங்கம் எதுவென்று சரியாகத் தெரியவில்லை. ஆனால் திலகம் என்பது மஞ்சாடி மரம் எனக் குறிப்பிட்டுள்ளார். இக்காலத்தில் திலகத்தை ஆனைக்குண்டுமணி என்றழைப்பர். இதற்குப் பளபளப்பான சிவந்த விதைகள் உண்டு. இந்த விதைகளைப் பொன்னை எடையிடப் பயன்படுத்துவர். இதன் விதைகள் 4 கிரெயின் எடையுடையதாகும். திலகமரம் அழகிய மரமாகும். இதன் விதைகளை வணிகர் Barracari விதைகள் என்று கூறுவர். இதன் பூவும் மணமுடையதாகும். இந்தத் திலக மரமும் பயனுடையது. திலகம் என்ற பெயர் மணிமேகலையிலும், நிகண்டுகளிலும் பயில்கின்றது. திலகம் என்ற பெயர் இந்த மரத்திலிருந்து அரைத்து எடுக்கும் சாந்தைப் பொட்டாக வைத்துக் கொண்டதால் வந்ததாகும். அறிவியலில் திலகம் Adenantera pavononia ஆகும். போங்கத்தையும் மஞ்சாடி என்று கருதினால் அதை மலைமஞ்சாடி என்று கொள்ள வேண்டும். மலைமஞ்சாடி என்ற வழக்கும் உள்ளது. இதை அறிவியற்படி Osmosia travancorica என்றழைக்க வேண்டும். இது மேற்குத் தொடர்ச்சி மலையில் காணப்படும் நெடிய மரமாகும். இதனுடைய விதையும் சிவப்பாக இருக்கும். மஞ்சாடி மரத்தின் விதை போன்றே சிவப்பாயிருப்பதால் மலைமஞ்சாடி என்றழைக்கப்பட்டது.

தேனைப்போல மணமுள்ளது எனப் பாதிரிப் பூ கூறப்பட்டுள்ளது. இதைப் பாடலம் என்று வடமொழி இலக்கியத்தில் அழைப்பர். பாதிரி மரம் தெரிந்ததொன்றாகும். இந்த மரத்தின் பூவைக் குடிக்கும் தண்ணீருக்கு மணமூட்டப் பயன்படுத்தியதைச் சங்க நூல்கள் கூறியுள்ளன. இதன் வடமொழிப் பெயர் திராவிட மொழியிலிருந்து பெற்றதாகும். இதை அறிவியலில் Stereospermum chelonoides என்றழைப்பர். இதைப் பற்றிய விளக்கம் யான் எழுதிய "சங்க நூல்களில் செடி கொடி விளக்கம்" என்ற நூலில் காண்க.

செருந்தி என்பதை (புறம். 369, அகம். 280) உரையாசிரியர் ஒருவகை பைஞ்சாய்க் கோரை என்று குறிப்பிட்டிருந்தாலும் வேறு உரையாசிரியர்கள் செங்கோடு, பஞ்சரம் என்ற மரமாகக் கொண்டனர். நிகண்டுகளும் அவ்வாறே கொள்ளுகின்றன. செருந்தி என்பது ஒரு மரமேயாகும். இதற்கு ஆரஞ்சு நிறத்தில் பூவிதழ் உண்டு. இதை Ochna squrrosa என்று அறிவியலில் அழைப்பர்.

அதிரல் என்பதற்கு மோசி மல்லிகை என்றும் புனலிப்பூ என்றும் உரையாசிரியர்கள் பொருள் கூறியுள்ளனர். புனலிப் பூ என்பதே சரியான பொருளாகும். இது பல பூக்களை உடைய ஒரு கொடியாகும். இதன் மொக்கை குயிலினுடைய மூக்கிற்கும் காட்டுப் பூனையின் கூரிய பல்லிற்கும் (அகம் 391) ஒப்பிட்டுள்ளனர். இந்தப் பூவிற்கு நகத்தைப் போன்ற கூர்மையான இதழுண்டு என்று அறிவியலில் கூறுவர். அகநானூற்றில் யானை உண்ட அதிரல் (அகம் 157) கூறப்பட்டுள்ளது. இன்றும் இது ஆனைகெல்லிக் கொடி என்றழைக்கப்படுவதைக் காணலாம். சங்க கால உண்மைச் செய்தியை இக்கால நாட்டு மக்களும் தெரிந்து கூறியது குறிப்பிடத்தக்கதாகும். இது முதுவேனிலில் பூப்பதாகச் சங்க நூலில் (அகம். 261, 393) கூறப்பட்டதும் உண்மையான செய்தியே. இதை அறிவியலில் Derris scandens என்றழைப்பர்.

சண்பகம் யாவரும் அறிந்ததொன்றே. இதன் பூ குளிர்ச்சியாகவும் பெரியதாகவும் இருக்கும் என்று கூறப்பட்டுள்ளது. இதைப் பூவின் நறுமணத்திற்காகத் தோட்டங்களில் வளர்ப்பர், இதை அறிவியலில் Michelia Champaca என்றழைப்பர். மேற்குத் தொடர்ச்சி மலையில் இயற்கையாக வளர்வதாகும்.

கரந்தை ஒரு செடியாகும். இதன் பூ சிவப்பாயிருக்குமென்று அகநானூறு கூறியுள்ளது. புறநானூற்றுப் பாடலில் (261) இதன் பூ இளம் கன்றின் பால்மடிக்கு ஒப்பிடப்பட்டுள்ளது. புறப் பாடலிலும் (340) அகப்பாடலிலும் (226) பதிற்றுப்பத்திலும் (40 : 5) இது வினைநிலத்தில் காணப்படுவதாகக் கூறப்பட்டுள்ளது. மற்றும் ஐங்குறுநூறு (26) அகநானூறு (269) ஆகிய பாடல்களிலும் கரந்தை கூறப்பட்டுள்ளது. குறிஞ்சிப்பாட்டில் நறுமண மிக்கது கரந்தை என்று கூறப்பட்டுள்ளது. நாறுகரந்தை என்றும் அழைக்கப்படும். பிற்காலத்தில் சிவகரந்தை என்றழைக்கப்பட்டது. இதை அறிவியலில் Spharanthes amaranthoides என்றழைப்பர்.

குளவி என்ற செடி சங்க நூல்களில் அடிக்கடி கூறப்படும் செடியாகும். உரையாசிரியர்கள் இரண்டு பொருள்கள்

கூறியுள்ளனர். நச்சினார்க்கினியர் இதைக் காட்டுமல்லிகை என்று கொண்டார். பிற உரையாசிரியர்கள் மலையில் விளையும் மலைப் பச்சை என்று கொண்டனர். மலைப்பச்சை என்று பொருள் கூறினதே பொருத்தமானதாகும் இந்தச் செடி சங்க நூல்களில் மலைகளிலேயே காணப்படுவதாகச் சொல்லப்பட்டிருக்கின்றது. அக நானூற்றிலும் (82, 272) குறுந்தொகையிலும் (100) மலைவீழ் அருவிகளினருகில் உளதாகக் கூறப்பட்டுள்ளது. புறநானூற்றிலும் (90) பதிற்றுப்பத்திலும் (70 : 3) இதன் இலைகள் அடர்ந்து வளர்ந்தது கூறப்பட்டுள்ளது. குறுந்தொகையில் இதன் இலைகள் பறிக்கப்பட்டு மாலைகளில் தொடுக்கப்பட்டது கூறப்பட்டுள்ளது. நற்றிணையில் (346) கொல்லிமலையில் காணப்பட்ட சிறு குளவிச் செடியின் இலையை கூந்தலில் அணிந்து கொண்டது கூறப்பட்டுள்ளது. உரையாசிரியர் சிறுகுளவி என்பதற்கு மலைப் பச்சை என்று பொருள் கூறியுள்ளார். திவாகரத்திலும் இதே பொருள் கூறப்பட்டுள்ளது. இதன் இலையிலிருந்து எடுக்கப்படும் ஒரு நறுமணமிக்க எண்ணெய் வணிக வழக்கில் பச்சூலி (Patcholi) என்று மேல்நாட்டில் இன்றும் அழைக்கப்படுகின்றது. பச்சிலை என்ற தமிழ்ச் சொல்லே பச்சூலி என்று மேல்நாட்டு மொழிகளில் வழங்குகின்றது. குளவி என்ற மலைப்பச்சை அறிவியலில் (Pogo-stemon vestitum என்று அழைக்கப்படுகின்றது. இந்தச் செடி யானது கடல் மட்டத்திலிருந்து 6000 அடி முதல் 8000 அடி வரை வளர்வதாகக் கண்டுபிடிக்கப்பட்டுள்ளது. சங்க நூல்களில் மூன்று வகை நறுமணமிக்க இலைகளையுடைய செடிகள் கூறப்பட்டுள்ளன. ஒன்று Garcinia zenthocymus ஆகும். இது முன்னரே விளக்கப் பட்டது. மூன்றாவது தமாலமாகும். இது திவாகரத்தில் கூறப் பட்டுள்ளது. சங்க நூல்களில் நற்றிணையில் தான் ஒரே ஒரு பாடலில் (292) தமாலம் கூறப்பட்டுள்ளது. இதை தமால பத்திரி என்றும் கூறுவர். பச்சிலைகளை வைத்து மாலைகளைத் தொடுக்கும் வழக்கம் இன்றும் உள்ளது. புறநானூற்றில் (33) அத்தகைய மாலை கூறப்பட்டுள்ளது. இதன் இலை புலராப் பச்சிலை என்று அழைக்கப்பட்டுள்ளது.

காட்டு மாமரத்தை கலிமா என்று குறிஞ்சிப்பாட்டு அழைத் துள்ளது. இது பச்சிலைக் காடுகளில் இயற்கையாகவே வளர்வது. இதனுடைய பழத்தில் டர்பன்டைன் நிறைய உண்டு. அதனால் நஞ்சுடையது.

(தொடரும்)

———

# பாடும் பணியே பணி

[க. சி. கமலேயா]

முருகன் அழகுத் தெய்வம். கார்காலத்தில் தோகை விரித்து மயிலாடும் அழகைப் பருகாதார் யார்? மயில் முருகனுக்கு ஊர்தியா யமைந்தது பொருத்தமே. அனைத்துயிர்களும் மகிழப் பலரும் புகழ்ந் தேத்தும் சூரியனைக் கடலிற் கண்டது போலிருக்கின்றது மயிலின் மீது சிவந்த மேனியை உடைய முருகப்பெருமான் தோற்றம். நீலக் கடல்போல மயிலும் சிவப்பு நிறமுள்ள கதிரவன்போல முருகனும் உளர்.

''உலகம் உவப்ப வலனேர்பு திரிதரு
பலர்புகழ் ஞாயிறு கடற்கண் டாஅங்கு
ஓவற இமைக்கும் சேண்விளங் கவிரொளி''

நக்கீரர் முருகனை ஞாயிறென்றுக்கு ஒப்பிட்டாரென்றல் அருணகிரிநாதரின் கற்பனை சிறகடித்துப் பறக்கிறது.

''உததியிடை கடவு மரகத அருண குலதுரக
உபலளித கனகரத சதகோடி சூரியர்கள்
உதயமென அதிகவித கலபகக மயிலின்மிசை
உகமுடிவின் இருளகல வொரு சோதி வீசுவதும்
..........சீறடியே.''

[உததி - நீர் தங்குமிடம், கடல். கடவுதல் - ஏறிச் செலுத்தல்; குல துரக - இலக்கணம் அமைந்த குதிரைகள்; அதிக வித - பல வகை நிறமுள்ள; ககம் - பறவை; உகம் - உலகம்.]

''கடலின் நடுவில் செலுத்தப்படும் பசுமையும் செம்மையுமான இலக்கணம் அமைந்த குதிரைகள் பூட்டிய அழகுவாய்ந்த பொன்மய மான தேர்களில் நூறுகோடி சூரியர்கள் ஒரே காலத்தில் எழுந் தனரோ என்று சொல்லும்படி அடர்த்தியான பலவகை நிறமுள்ள தோகையையுடைய மயிலின்மீது உலகம் எல்லாம் அழியும் காலத்தில் ஏற்படும் பேரிருள் ஓடியொளியும்படி ஒரு பேரொளி பரப்புவது உன் ஒப்பற்ற திருவடியே'' என்று புரியும் தமிழில் பொருளுரைக்கலாம்.

'தாய் ஓரடி பாய்ந்தால் குட்டி எட்டடி பாயும்' என்பது நாட்டில் வழங்கும் பழமொழி. முருகன் திருவடியே சதமென வாழ்ந்த குமர குருபரர்,

"சோதி
இளம்பரிதி நூரு யிரம்கோடி போல
வளம் தரு தெய்வீக வடிவு"

முருகனுடையது என்று பாடுகிறார்.

'ஒரு சோதி' என்று அருணகிரிநாதர் உரைப்பது இறைவன் ஒருவனே என்பதை வலியுறுத்துகிறது.

"ஆதியும் அந்தமு மில்லா அரும் பெருஞ்சோதி"

என்றும்,

"நிருத்தனே, நிமலா, நீற்றனே, ஒருத்தனே"

என்றும் மாணிக்கவாசகர் திருவாசகத்தில் இறைவனைப் பற்றிச் சொல்வது குறிப்பிடத் தக்கதாகும்.

"ஆடும் பரிவே லணிசே வலெனப்
பாடும் பணியே பணியா வருள்வாய்
தேடும் கயமா முகனைச் செருவிற்
சாடும் தனியானை சகோதரனே."

பாடும் பணியினையே (தொண்டை) தனக்குப் பணியாக (தொழிலாக அல்லது வேலையாக) அருளவேண்டுமென்று முருகனை அருணகிரிநாதர் வேண்டுகிறார். முருகனைப் பாடும் அவர் அவனினின்றும் நீங்கா ஆடும் பரியான மயிலையும் வேலையும் சேவலையும் பாடும் பணியையும் வழங்கவேண்டுமென்று முருகனை வழிபடுகிறார். இப் பாடலின் சிறப்பு பாடும் பணிக்கு முதலிடம் அளிப்பதாகும்.

"மூவிரு முகங்கள் போற்றி முகம்பொழி கருணை போற்றி
ஏவரும் துதிக்க நின்ற ஈராறு தோள்போற்றி காஞ்சி
மாவடி வைகுஞ் செவ்வேள் மலரடி போற்றி யன்னான்
சேவலும் மயிலும் போற்றி திருக்கைவேல் போற்றி போற்றி."

என்று சேவலையும் மயிலையும் வேலையும் ஒருங்கே போற்றுவது முருகனடியார் கையாளும் மரபு. சேவலும் மயிலும் வேலும் ஒளியுடன் தொடர்புள்ளவை. சேவலுக்கு இருளகற்றுவோன் என்று ஒரு பெயர் உண்டு. முருகன் அழகுத் தெய்வம் மட்டுமல்லன்; வீரத்துக்கும் தெய்வமே. சேவல் கூவும்போது பார்த்தால் எதிரி எவரேனும் உண்டா என்று கொக்கரிப்பதுபோல் தோன்றுகிறது. போர்க்களத்தில் மனிதன் புறமுதுகிட்டு ஓடுகிறான். அதைப் 'போர்த் தந்திரப் பின்வாங்கல்' என்று இக்காலத்தில் சொல்கின்றனர்.

இரண்டு சேவல்கள் போரிடும்போது தோற்கும் சேவல் ஓடுவதைப் பார்க்கவே முடியாது; சாகும்வரை சண்டையிட்டு விழும். முருகன் கொடியைச் சேவல் அழகுசெய்வதில் ஒரு தத்துவமே புதைந்து கிடக்கிறது. இளம்பரிதியின் வருகையைக் கொம்பூதி அறிவிப்பது போல் சேவல் அறிவிக்கிறது. எல்லாப் புள்ளினங்களும் கோழியின் அறிவிப்புக்காகத்தான் காத்து நிற்கின்றன.

'கோழி சிலம்பச் சிலம்பும் குருகெங்கும்' என்று மாணிக்க வாசகர் சேவலுக்கு முதலிடம் அளிக்கின்றார். சேவல் கூவுகிறது; கதிரவன் உதிக்கின்றான்; உலகம் விழிக்கிறது. நீலக் கடலினின்றும் மேல்நோக்கும் ஞாயிற்றின் கதிர்கள் மயிலின் விரித்த தோகையை ஒத்திருக்கின்றன. முருகன் என்ற ஞாயிறு கடல் என்ற மயிலின் மீதமர்ந்து எழுகின்றான். வேல் அறியாமை என்ற இருளை அகற்று கிறது. எனவே கந்தரனுபூதியின் தொடக்கப் பாடல் கீழ்வானில் உலகம் உவப்பக் கிளர்ந்தெழும் ஞாயிற்றின் வருகைக்குக் கட்டியம் கூறுவதுபோல் அமைகிறது.

என்னை இழந்த நலம் :

''உல்லாச நிராகுல யோகவிதச்
சல்லாப விநோதனு நீயலையோ
எல்லாமற என்னை யிழந்த நலம்
சொல்லாய் முருகா சுரபூபதியே.''

முருகன் உள்ளக் களிப்புடையவன் (உல்லாசன்); எவ்விதத் துன்பமு மில்லாதவன் (நிராகுலன்); அவரவர்கள் பெற்றிக்குத் தக்கபடி அடியார்களுடன் அளவளாவுபவன் (யோகவிதச் சல்லாபன்); திரு விளையாடல்களைப் புரிபவன் (விநோதன்). ''எல்லாப் பற்றுகளும் தொடர்புகளும் அற்றுப்போய் நான் என்ற ஆன்மாவையிழந்து உன் னுடன் ஒன்றிய கிடைத்தற்கரிய பேற்றையடைய நீதான் எனக்குச் சொல்லவேண்டும்'' என்று முருகனிடம் அருணகிரிநாதர் விண்ணப் பித்துக் கொள்கிறார்.

ஆகுலன் என்ற சொல்லுக்கு எதிர்மறை நிராகுலன்.

''மனத்துக்கண் மாசில னாதல் அனைத்தறன்
ஆகுல நீர பிற.''

என்ற திருக்குறளில் 'ஆகுல' என்ற சொல் பயன்படுத்தப்பட் டுள்ளது. ''ஒருவன் தனது நெஞ்சத்துக்கண் பாவக்கருத்து இல னாதலே அனைத்தறங்களும் ஆகும், ஒழிந்தன எல்லாம் துக்கத் தன்மை யுடையன'' என்று இக் குறட்பாவுக்குக் காலிங்கர் உரையெழுது

கிரா. எனவே, 'நிராகுல' என்பதற்குத் 'துக்கமில்லாதவனே—துன்பமில்லாதவனே' என்று பொருள் கொள்ளுதல் பொருந்தும்.

'உல்லாச' என்று சொன்னதுமே 'நிராகுல' என்று உடனடியாகச் சொல்வதேன்? 'நன்றுடையானைத் தீயதில்லானை' என்று சிராப் பள்ளிக் குன்றுடையான் போற்றப்படுகின்றான். நல்லன எல்லாவற்றையும் முழுமையாக உடையவன் என்பதை வலியுறுத்த 'தீயதில்லான்' என்ற சொல்லாட்சி இன்றியமையாததாகும். அதே போன்று அருணகிரிநாதரும் 'உல்லாச' என்று சொன்னதுமே 'நிராகுல' என்றுரைத்து ஐயத்தைப் போக்குகிறார்.

இறைவனை 'அருளானந்தக் கடற் பிறந்த அமுது' என்று குமர குருபரர் சொல்கின்றார். 'அடியார்களுடன் அவரவர் மனப்பக்குவ மறிந்து முருகன் சல்லாபம் செய்கின்றான்' என்பதற்கு விளக்கம் வேண்டுமானால் காரைக்காலம்மையாரின் அற்புதத் திருவந்தாதியின் பாடல் ஒன்று நமக்குத் துணைபுரியும்.

''நூலறிவு பேசி நுழைவிலாதார் திரிக
நீலமணிமிடற்றான் நேர்மையே—மேலுலந்த
தெக்கோலத் தெவ்வுருவாய் எத்தவங்கள் செய்வார்க்கும்
அக்கோலத் தவ்வுருவே யாம்.''

எவரெவர் எவ்வாறு இறைவனைக் கொள்கின்றாரோ அவ்வாறே அவனும் அமைகின்றான். அவன்முன் உயர்ந்தவன் தாழ்ந்தவன் என்பதில்லை.

'என்னை இழத்தல்' என்பது கடைசி நிலை. இதைத்தான் மாணிக்கவாசகர் 'நான் கெட்டவா' என்கிறார். 'நான்' கெட்டதும் இறைவன் தோன்றுகின்றான். என்னை இழக்கும் நிலையை அடைவதற்குமுன் பற்று ஒழியவேண்டும். எனவேதான் அருணகிரி நாதர் 'எல்லாமற' என்றார். ஆசையென்பது பொல்லாத தொற்று நோய். எனவேதான் திருமூலர்,

''ஆசை யறுமின்கள் ஆசையறுமின்கள்
ஈசனோடாயினும் ஆசையறுமின்கள்''

என்று திருவாய் மலர்ந்தருளினார். என்னை இழந்த நலமே சிவானந்தப் பெரும் பேறு.

---

## ஊழல் ஒழிய . . .

*ஆட்சி முறையிலோ சமுதாய அமைப்பிலோ பெரிய மாறுதல் ஏற்பட்டால் தவிர ஊழல்கள் குறையும் என்று நம்புவதற்கில்லை.*

—டாக்டர் மு. வரதராசனார்

# ‘புதுவை முரசு’ இதழின் ஆசிரியர்?

[மா. அண்ணுத்துரை, எம் ஏ., பி. லிப்., எசி., பி. எட்.
(பிஎச். டி. ஆய்வாளர்)
நூலகர், ஈரோடு கலைக் கல்லூரி, ஈரோடு.]

பாவேந்தர் பாரதிதாசன் துவக்க நாட்களில் தமது எழுத்தாற்றலை அக்கால இதழ்களின் வாயிலாக வெளியிட்டு வந்தார். சுதேசமித்திரன், ஜனவிநோதினி, தேசசேவகன், தேசபக்தன், ஸ்வராஜ்யா, தேசோபகாரி, புதுவை கலைமகள், ஆனந்தபோதினி, தாய்நாடு போன்ற இதழ்களில் பிரெஞ்சிந்திய அரசியல் கருத்துகள், இந்திய நாட்டு சுதந்தரப்போர், காந்தியடிகளின் கொள்கைகள் ஆகியன பற்றியும் அவ்வப்போது எழுதி வந்தார். பாரதியின் மறைவிற்குப் பின், பெரியாரின் பகுத்தறிவுக் கொள்கைகள் பாவேந்தரைப் பற்றிக் கொண்டன. அதன் விளைவாக சுயமரியாதை இயக்கத்தில் தம்மை இணைத்துக் கொண்டு பகுத்தறிவுக் கொள்கைகளைத் தம் கவிதைகள், கட்டுரைகள் மூலம் பரவச் செய்து வந்தார். அந்நாளில் தம் பகுத்தறிவுக் கருத்துகளை வெளியிடும் கருவியாகப் பெரியாரின் ‘குடியரசு’, ‘ரிவோல்ட்’ போன்ற இதழ்கள் அமைந்தன.

எனவே, புதுவையிலிருந்து தாமே ஓரிதழ் தொடங்க, பாவேந்தர் விரும்பினுர். ஆனுல் அவர் அரசு அலுவலில் இருந்த காரணத்தால் நேரடியாகச் செயல்பட இயலவில்லை. தன்மான இயக்கத் தோழரான நோயேல், லகாஷ் ஆகியோர்களுடன் சேர்ந்து, புதிய பகுத்தறிவு இயக்க இதழ் ஒன்றினைத் துவக்க விரும்பினுர். இதற்கு முன் கையெழுத்துப்படி வடிவில்[1] ‘புதுவைமுரசு’ என்னும் இதழினை நடத்தி வந்தார். அதன் பெயரையே இந்த இதழுக்கும் பெயராகச் சூட்டினுர். லகாஷ் என்பவரை வெளியீட்டாளராகக் கொண்டு வெளியிட, புதுவை பிரெஞ்சிந்திய அரசிடம் முன் உரிமம் பெற்ருர்கள். பொறுப்பாசிரியராக ம. நோயேல் அவர்களைப் பாவேந்தர் அமர்த்தினுர். இதழை நடத்தும் பொறுப்புகள் அனைத்தும் ம. நோயேல் அவர்களே கவனித்துக் கொள்ளும்படி தரப்பட்டன. 10—11—1930ஆம் நாள் முதல் ‘புதுவை முரசு’ இதழ் பாவேந்தர் பாரதிதாசன் அவர்களால் ‘‘சுயமரியாதைக் கொள்கையில் பிரெஞ்சிந்தியாவுக்கு வேண்டிய திருத்தங்களுடன் பிரெஞ்சிந்திய மக்களுக்குப் பரப்புவது நோக்கம்’’ என்றும், ‘‘சுதந்தரம், சமத்துவம், சகோதரத்துவம் என்ற கொள்கைகளுக்குப்

பாடுபடும்[2]'' என்றும், அதில் குறித்துத் தொடங்கப்பட்டது. பாவேந்தர் அவர்களே அந்தப் புதுவை முரசு இதழின் ஆசிரியராகப் பணி புரிந்தார் என்று மன்னர் மன்னன் அவர்களின் கூற்றுலும்,[3] கவிஞர் மலரில் காணப்படும் வாழ்க்கைக் குறிப்பினுலும்,[4] தா. கோவிந்தன் தொகுத்த வாழ்க்கைக் குறிப்பாலும்,[5] பாவேந்தர் பாரதிதாசனின் பெருமை என்ற நூலாலும்,[6] பாரதிதாசனின் கதைப் பாடல்கள் என்ற ஆய்வுரையாலும்,[7] பாரதிதாசன் ஒரு புரட்சிக் கவிஞர் என்ற ஆய்வுரையாலும்,[8] அறிய முடிகின்றன. சென்னையிலும், புதுச்சேரியிலும் தொடங்கிய 'இந்தியா' பத்திரிகைக்கு பாரதியார் அவர்கள் மறைமுகமான ஆசிரியராக இருந்தார் ; வெளிப்படையாக அந்நாளில் ஸ்ரீசீனிவாசன் என்பவரே ஆசிரியரும் பிரசுரிப்பவரும் ஆவார்.''[9] பாரதிதாசன் அவர்களும் பாரதியார் போன்றே மறைமுக ஆசிரியராக இருந்தார்.

மேலும் 'புதுவை முரசு' இதழுக்கு ம, நோயேல் அவர்களுக்குப் பின், பாவேந்தர் அவர்களால் பொறுப்பாசிரியராக நியமிக்கப்பட்ட புதுவை எஸ். சிவப்பிரகாசம் அவர்களும், 'பாவேந்தர் அவர்களே புதுவை முரசு இதழின் ஆசிரியர்' என்று கூறியுள்ளமை அறியத் தக்கது ஆகும்,

எஸ். சிவப்பிரகாசம் அவர்களின் கூற்று வருமாறு :

''புதுவை முரசிற்கு ஆசிரியராகக் கவிஞர் பாரதிதாசன் அவர்கள்தான் எழுதி வந்தார்கள். ஆனுல் இவர் அரசாங்க உத்தியோகத்தில் இருப்பதால் நேரடியாக அதில் ஈடுபடக்கூடாது என்று அவருடைய மாணவர் க. இராமகிருட்டிணன் என்பவரை ஆசிரியராகப் போட்டு இவர்மட்டும் தலையங்கம், கவிதைகள், கட்டுரைகள், விகடத் துணுக்குகள், உள்ளூர்ச் செய்திகள், முதலியவைகளை K. S. நாடோடி, அடுத்த வீட்டுக்காரன், சுயமரியாதைக்காரன், வழிப் போக்கன், கிண்டற்காரன் போன்ற புனை பெயர்களில் எழுதி வந்தார். இப்படிச் சில நாட்கள் போன உடனே, கவிஞர் அவர்கள் குத்தூசி குருசாமி அவர்கட்குக் கடிதம் எழுதி, 'நீங்கள் ஆசிரியர் பொறுப்பினை ஏற்றுக் கொள்ளுங்கள், நடத்துவன எல்லாம் நாங்கள் நடத்திக் கொள்கிறோம்' என்று கேட்டார்கள். அவரும் சம்மதித்தார். அவர் பெயரால், அவர் ஆசிரியராக, பெயர் அளவிலேயே இருந்துகொண்டு நாங்கள் பத்திரிகை நடத்திக் கொண்டு வந்தோம். எஸ். குருசாமி அவர்கட்கு நன்றி தெரிவிக்கும் வகையில் 1930இல் சுயமரியாதைச் சுடர் என்னும் நூலினைக் கிண்டற்காரன் என்ற புனைபெயரில் வெளியிட்டபோது 'புதுவை முரசு' ஆசிரியர் திரு. எஸ். குருசாமி பி. ஏ, அவர்கட்கு ஸமர்ப்பணம்' என்று குறிப்பிட்டார் கவிஞர் பாரதிதாசன். பெயர்

அளவில் இருந்த குத்தூசி குருசாமி அவர்களும் கூட குறுகிய கால அளவிலேயே அப்பொறுப்பிலிருந்து விடுபட நேர்ந்தது.''[10]

இவை மட்டுமன்று ; குத்தூசி குருசாமி அவர்கள் ராஜமகேந்திரபுரத்திலும் சென்னையிலும் அலுவல் புரிந்து கொண்டு இருந்தார். அவரின் துணைவியார் அவர்களும் ராஜமகேந்திரபுரத்திலேயே அலுவல் புரிந்தார். இந்திய யூனியனைச் சார்ந்த எஸ். குருசாமி அவர்களையே ஆசிரியராக நியமித்தால் பிரெஞ்சிந்திய அரசால் நமக்கு யாதொரு துன்பமும் வாராது எனப் பாவேந்தர் கருதினார்கள். எனவே ராஜமகேந்திரபுரத்தில் தங்கியிருந்து கொண்டு, புதுவையில் நடத்தப்பட்ட 'புதுவை முரசு' இதழுக்கு நேரடியாக ஆசிரியப் பணி செய்தல் அரிது என்பது தெற்றென விளங்கும். இது மட்டுமன்று. ஏறக்குறைய இரண்டாண்டு காலம் நடைபெற்ற புதுவை முரசுக்கு எஸ். குருசாமி அவர்களின் பெயர் 29—12—1930 முதல் 11—5—1931 வரைதான் குறிக்கப்பட்டுள்ளது. அதன் பின்பு ஆசிரியர் பெயர் குறிக்காமலே புதுவை முரசு நடத்தப்பட்டது. ''எஸ், குருசாமி அவர்கட்குத் தனிப்பட்ட கடிதங்கள் 7/240, நந்தி வாடவார் தெரு, ராஜமகேந்திரபுரம் என்ற முகவரிக்கு'' அனுப்ப வேண்டும் என்றும், கட்டுரைகள், கவிதைகள் போன்றவைகள் புதுவை முரசு அலுவலகத்திற்கே அனுப்ப வேண்டும்'' என்றும் 'புதுவை முரசு' இதழில் தெளிவாகக் குறிக்கப்பட்டுள்ளது.[11]

புதுவை முரசு மீது வழக்கு : புதுவை முரசு இதழினைக் காண்போருக்கு ஓர் உண்மை புலனாகும். பாவேந்தர் சுயமரியாதைக் கொள்கையுடையவர். ம. நோயேல் தாழ்த்தப்பட்ட கத்தோலிக் வகுப்பைச் சார்ந்தவர். இருவரும் எல்லா மதங்களின் கோட்பாடுகளையும் எதிர்த்தனர். குறிப்பாக, புதுவை முரசில் குறித்தபடி, 'சுயமரியாதைக் கொள்கையில் பிரெஞ்சிந்தியாவுக்கு வேண்டும் திருத்தங்களுடன் பிரெஞ்சிந்திய மக்களுக்குப் பரப்புவது' என்ற கொள்கையின் வழி, புதுவையில் உள்ள கத்தோலிக்க மதத்தைச் சேர்ந்தவர்களே தாக்குதலுக்கு உள்ளானார்கள். ஏனெனில் பிரெஞ்சு அரசின் ஆதரவினால் கத்தோலிக்கர்கள் புதுச்சேரியில் ஆதிக்கம் செலுத்தி வந்தனர். புதுவை முரசினால் பாதிக்கப்பட்ட புதுச்சேரி கத்தோலிக்க பாதிரிமார்கள் பொறுப்பாசிரியராகிய ம. நோயேல் மீது வழக்குத் தொடர்ந்தனர்.

''கத்தோலிக் குருப் பிரசாதிகளைப் பலவிதமாகத் தூஷித்தும், கத்தோலிக்கர் அனுஷ்டித்து வரும் பாவசங்கீர்த்தனமென்னும் தேவ ஏற்பாட்டின் மகிமையைத் தாக்கி, குருக்கள் மேல் வீண் அபாண்டங்களை ஏற்படுத்தியும், தொடர்பாகப் பல வியாசங்கள்

வெளி வந்தமையாலும் அவைகள் மான நஷ்டத்துக்கு உரியவைகளா யிருந்தமையாலும் புதுவை அதிமேற்றிராணியாராகிய மகா-வந்-கோலாஸ் ஆண்டவர்களும் புதுவையிலுள்ள மற்றும் 18 குருக்களும் மேற்படி சுயமரியாதைப் பத்திரிகைமீது வழக்குத் தொடர்ந்தனர்[12].

''இந்த வழக்கிற்கு கத்தோலிக் சிறுவன் எழுதிய ''பாவசங்கீர்த்தனத்தின் பெருமையும் பாதிரிமார்களின் கொடுமையும்''[13] ''கடவுளைப்பற்றி கவலை ஏன் ?''[14] போன்ற மூன்று கட்டுரைகளும், ''பாடசாலை ஆழ்வான்''[15] என்ற பெயரில் எழுதிக் கையொப்பம் இட்டுள்ள கட்டுரையும் காரணமாக இருந்தன. இவ்வழக்குப் புதுவை நீதிபதி கனம் முத்து ஆப்ரஹாம் அவர்களின் சார்பாக வக்கீல் ஞானு அம்புருவாஸ் அவர்களும் பிரதிவாதிகளின் சார்பில் ரத்தினசபாபதி அவர்களும் கலந்துகொண்டு வாதித்தனர்'.[16] 'மான நஷ்ட வழக்கில் ம. நோயேல் அவர்கட்குத் தண்டனை அளிக்கப் பட்டது':[17]

''இதனால் ம. நோயேல் அவர்கள் பொறுப்பாசிரியர் இடத்தில் இருக்க முடியாத நிலைமையேற்பட்டது. உடனே பாரதிதாசன் அவர்கள் என்னை அந்த இடத்தை ஏற்றுக்கொள்ளுமாறு செய்தார். நானும் அந்தப் பணியை ஏற்றுக் கொண்டு நிறைவேற்றி வந்தேன்''[18] என்று புதுவை முரசு இதழின் பொறுப்பாசிரியராக விளங்கிய எஸ். சிவப்பிரகாசம் அவர்கள் கூறுகின்றார். இதிலிருந்து 'புதுவை முரசு' ஆசிரியர் யார் என்ற கேள்விக்கு விடை கிடைக்கின்றது.

கட்டுரையின் மூலம் அறியப்பெறும் செய்திகள் வருமாறு :

(1) புதுவை முரசு இதழின் பொறுப்பாசிரியர் எஸ். சிவப்பிரகாசம் அவர்களின் கூற்றுப்படியும், மன்னர் மன்னன் அவர்களின் கருத்துப்படியும், கவிஞர் மலரில் வெளிவந்த கவிஞரின் வாழ்க்கை வரலாற்றிலிருந்தும், த. கோவேந்தன் தொகுத்த வாழ்க்கை வரலாற்றிலிருந்தும், முல்லை முத்தையாவின் ''பாவேந்தர் பாரதிதாசன் பெருமை'' என்ற நூலிலிருந்தும், டாக்டர் ச. சு. இளங்கோ அவர்களின் ''பாரதிதாசன் கதைப் பாடல்கள்'' என்ற ஆய்வுரை நூலிலிருந்தும், டாக்டர் ம. செல்வராசன் அவர்களின் ''பாரதிதாசன் ஒரு புரட்சிக் கவிஞர்'' என்னும் ஆய்வுரையிலிருந்தும் தெரிய வருவது : பாவேந்தர் பாரதிதாசன் அவர்களே. பாரதியார் இந்தியா என்னும் இதழுக்கு மறைமுக ஆசிரியராய் இருந்தது போன்று, புதுவை முரசின் மறைமுக ஆசிரியராக இருந்தார் என்பது புலனாகின்றது.

(2) புதுவை முரசு இதழின்மீது நடந்த வழக்குக்கு கத்தோலிக் சிறுவன் எழுதிய மூன்று கட்டுரைகளும் பாடசாலை ஆழ்வான் எழுதிய கட்டுரையும் காரணமாக விளங்கின என்பது உண்மை.[19] சிலர் கருதுவது போல எஸ். குருசாமி அவர்கள் எழுதிய 'அறிவிருக்கிறதா?' என்ற கட்டுரையானது, புதுச்சேரியில் ம. நோயேல் மீது நடந்த மான நஷ்ட வழக்கிற்குக் காரணமாக இருக்கவில்லை என்பது தெளிவாக அறிய முடிகிறது.

## சான்றுகள்


1. திருமதி, சரசுவதி கண்ணப்பர், கரூர் நேர் காணல்.

2. புதுவை முரசு: 10—11—1930.

3. மன்னர் மன்னன்: பாரதிதாசன் குயில்.

4. கவிஞர் மலர்: 28—7—1946 பக். 121.

5. த. கோவேந்தன், குயில் பாடல்கள், பூம்புகார் பிரசுரம். சென்னை. 1977 பக். 11.

6. முல்லை முத்தையா, பாவேந்தர் பாதிதாசன் பெருமைகள், 1980 பக். 12.

7. டாக்டர் ச. சு. இளங்கோ: பாரதிதாசன் கதைப் பாடல்கள் 1978 பக் 327.

8. டாக்டர் ம. செல்வராசன், பாரதிதாசன் ஒரு புரட்சிக் கவிஞர் 1979 பக். 442.

9. தினமலர் 11—12—1981.

10. எஸ். சிவப்பிரகாசம், பொறுப்பாசிரியர், புதுவைமுரசு கையெழுத்துப்படி.

11. புதுவை முரசு முழக்கம் 1 ஓச்சு 16 23—2—31 பக். 9.

12. ,, ,, 1 ,, 34 3—8—31 பக். 6.

13. ,, ,, 1 ,, 17 2—3—31 பக். 6.
 ,, ,, 1 ,, 28 13—4—31 பக். 12.

14. ,, ,, 1 ,, 16 23—2—31 பக். 8.
 ,, ,, 1 ,, 23 13—4—31 பக். 12.

15. ,, ,, 1 ,, 23 13—4—31 பக். 12.

16. ,, ,, 1 ,, 25 27—4—31 பக். 6.

17. ,, ,, 1 ,, 28 18—5—31 பக்.

18. எஸ். சிவப்பிரகாசம் பொறுப்பாசிரியர், புதுவை முரசு கையெழுத்துப்படி.

19. குருவிக் கரம்பை வேலு, குத்தூசி குருசாமி 1975 பக். 88.

# செய்திகள்

## 'திருக்கோயில்' ஆசிரியர் திரு. ந. ரா. முருகவேள் மறைவு

மறைமலையடிகளாரின் மாணவரும், 'திருக்கோயில்' இதழாசிரியருமான செந்தமிழ் வேந்தர், சித்தாந்த வித்தகர், ந. ரா. முருகவேள் அவர்கள் 7—4—85 இரவு, தமது 60ஆவது அகவையில் இறையடி சேர்ந்தார்கள் என்னும் செய்தியறிந்து ஆற்ருெணுத் துயரெய்துகின்ருேம். திரு. முருகவேள் அவர்கள் ஆங்கிலமும் அருந்தமிழும் பாங்குறக் கற்றவர். சைவசித்தாந்தத்தை ஆழ்ந்து கற்ற சமயப் புலவர். சமயச் சொற்பொழிவாற்றுதலிலும், கருத்தாழமுடைய கட்டுரைகளை வரைவதிலும் வல்லவர். இத்தகைய புலவர் பெருமகனுரின் மறைவு தமிழ் மொழிக்கும், சமய உலகிற்கும், குறிப்பாகச் சைவ சமயத்திற்கும் பேரிழப்பாகும். மறைந்த புலவரவர்களின் இன்னுயிர் இறையடியில் இன்புற இறைஞ்சுவதோடு, அவர்தம் குடும்பத்தார்க்கும் நண்பர்கட்கும் எமது ஆழ்ந்த இரங்கலைத் தெரிவித்துக் கொள்ளுகிருேம்.



## திரு. மு. சிவச்சந்திரனுர்க்கு 'முனைவர்' பட்டம்

தருமையாதீனப் பல்கலைக் கல்லூரியில் துணைப் பேராசிரியராகப் பணியாற்றிவரும் வித்துவான் திரு. மு. சிவச்சந்திரன், எம். ஏ. அவர்கள், "சமய, மொழி, வளர்ச்சியில் காசி மடத்தின் பங்கு" என்னும் தலைப்பில் ஆய்வேடு அளித்த வகையில், சென்னைப் பல்கலைக் கழகம், "முனைவர்" (டாக்டர்) பட்டத்தினை வழங்கியுள்ளது. இவர் 1970 முதல் 1976 வரை நாகை கனகசபைப் பிள்ளை தமிழ்க் கல்லூரியில் துணைப் பேராசிரியராகப் பணியாற்றி வந்தார். ஓராண்டு காலம் இவர் நிகழ்த்திய பெரியபுராணம் விரிவுரை நிறைவு விழாவில் மயிலாடு துறை ஸ்ரீஞானசம்பந்தர் வழிபாட்டுச் சங்கம் இவரைப் பாராட்டி, "சைவத் தமிழுரை நம்பி" என்னும் பட்டத்தினை வழங்கிச் சிறப்பித்துள்ளது.

## நீடாமங்கலத்தில் பாவாணர் விழா

நீடாமங்கலம் உலகத் தமிழ்க் கழகத்தின் சார்பில் பாவாணர் விழா, மருத்துவர் மறையரசனுர் அவர்கள் தலைமையில் நடை-

பெற்றது. உ. க. த கழகப் பொதுச் செயலர் திரு. குடந்தை கதிரி தமிழ்வாணன் முன்னிலையில் பதின்கவனகர் திருக்குறள் பெ. இராமையனுர் அவர்களின் பதின் கவன நிகழ்ச்சி நடைபெற்றது. இறுதியாக மருத்துவர் மறையரசன் அவர்களின் சிற்றிலக்கியப் பணியினைப் பாராட்டி திரு. இராமையா அவர்கள் இரண்டு பாடல்களைப் பாடி மறையரசனுர்க்குச் சிற்றிலக்கியச் செம்மல் என்னும் பட்டத்தை வழங்கினுர். மருத்துவரின் ஏற்புரைக்குப் பின் செயலர் கு. ஆறுமுகம் நன்றி நவில விழா இனிது நிறைவுற்றது.

## வாலாசாபாத் வா. தி. மாசிலாமணி முதலியார் உயர் நிலைப் பள்ளி 69ஆம் ஆண்டு விழா

வாலாசாபாத் மாசிலாமணி முதலியார் உயர்நிலைப்பள்ளியின் 69ஆம் ஆண்டு விழா 15-3-85 அன்று, திரு. வி. சுப்பிரமணிய முதலியார் அவர்கள் தலைமையில் சிறப்பாக நடைபெற்றது. செங்கற் பட்டு மாவட்டப் பேருந்து உரிமையாளர் சங்கத்தின் சார்பில் அதன் செயலர் திரு. டி. முத்துசாமி காசோலை வழங்கினுர். போட்டித் தேர்வில் வெற்றி பெற்ற மாணவர்களுக்கு திரு. ஆர். நடராச முதலியார் பரிசுகள் வழங்கினுர். செயலர் திரு. நா. ப. தணிகை அரசு நன்றி நவில விழா இனிது நிறைவேறிற்று.

## திருவள்ளுவர் தமிழ்க் கல்லூரி

சென்னை நக்கீரர் கழகத்தின் சார்பில் நடைபெற்றுவரும் திரு வள்ளுவர் தமிழ்க் கல்லூரிப் பேராசிரியர்கள் சிலர் உயர் பட்டமும், தாம் இயற்றிய சிறந்த நூல்களுக்குத் தமிழக அரசின் பரிசுகளையும் பெற்றுள்ளனர். அத்தகையோரைப் பாராட்டுமுகத்தான் 1-4-85 அன்று மாலை மண்ணடி ஏ. ஆர். சி. மகளிர் பள்ளியில் பாராட்டு விழா நடைபெற்றது. சிலம்பொலி செல்லப்பன் அவர்கள் தலைமை ஏற்க, முனைவர் ஔவை து. நடராசன் தமிழ்த்திரு வீரப்பன் ஆகியோர் பரிசு பெற்ற திரு. பூ. சுப்பிரமணியம், முனைவர் சு. மோகன ராசர், டாக்டர் பட்டம்பெற்ற ஆ. கந்தசாமி ஆகியோரைப் பாராட் டிப் பேசினர். டாக்டர் ஆ. கந்தசாமி நன்றி நவின்றுர்.

நக்கீரர் கழகத்தார், "வீடு தோறும் திருக்குறள் வழிபாடு" என் னும், ஒரு திட்டம் திருவியுள்ளனர் என்பதும் குறிப்பிடத்தக்கது.

## இராமநாத அடிகளார் நினைவு விழா

சிவநேயர் பேரவை சார்பில் 22-3-85இல் சைதை தாடண்டர் நகர் குமுகாயக் கூடத்தில் மேனுள் கழகப் புலவர், சித்தாந்த பண்டிதர் ப. இராமநாத அடிகளாரின் நினைவு விழா நடைபெற்றது. பேராசிரியர் திரு. பெ. திருஞானசம்பந்தர் தலைமை ஏற்றுர். பெரும்புலவர் திரு. இர. திருஞான சம்பந்தர் வரவேற்புரை யாற்றினுர். திரு. ஆ இராசரத்தின முதலியார் விழாவினைத் தொடங்கி வைத்தார். இராவ் சாகிப் திரு. நல் முருகேச முதலியார் அவர்கட்குச் சைவப் பேரறிஞர் என்னும் பட்டம் வழங்கப்பட்டது. மற்றும், திருவாளர்கள் கா. மு. சிவராமன் செட்டியார், மா. ரா. சம்பந்த நாயகர், இராசு முதலியார் ஆகியோர்க்கு முறையே சிவ நெறிச் செம்மல், திருமுறைக் காவலர், தொண்டர் மாமணி என்னும் பட்டங்கள் வழங்கப்பட்டன. பட்டம் பெற்றவர்களைப் பாராட்டி

அறிஞர் பலர் வாழ்த்துரை வழங்கினர். திரு எம். சாமிநாதன் அவர்கள் நன்றி நவின்றார். சைவப் புலவர் மாசிலாமணி அவர்கள் மகேசுர பூசை நடத்தி வைத்தனர்.

## பகுத்தறிவு ஆசிரியரணி

சென்னை மாவட்டப் பகுத்தறிவு ஆசிரியரணியின் சார்பில் 15—3—85 மாலை பெரியார் திடலில் மானமிகு பெரியார் பேருரையாளர் இறையனார் அவர்கள் தலைமையில், மறைமலையடிகள் நூலகப் பொறுப்பாளர் திரு இரா. முத்துக்குமாரசாமி, எம். ஏ., பி. லிப். அவர்கள் 'மறைமலையடிகளார்' என்னும் தலைப்பில் சிறப்புரையாற்றினார். திரு. ச. மா. விசுவாசவரம், புலவர் தமிழ் நாவன் ஆகியோர் உரையாற்றினர் புலவர் காவிரிச் செல்வன் நன்றி நவின்றார்.

## திரு. ஆ. ஆனந்தராசன் அவர்கட்கு முனைவர் பட்டம்

மதுரை தியாகராசர் கல்லூரித் தமிழ்ப் பேராசிரியர் திரு. ஆ. ஆனந்தராசன் அவர்கள், அக் கல்லூரி முதல்வர் முனைவர் சுப. அண்ணாமலை அவர்கள் மேற்பார்வையில் ''சிவஞான முனிவரின் சைவசித்தாந்த விளக்கம்'' என்ற பொருள்பற்றி ஆய்வு செய்து, மதுரை காமராசர் பல்கலைக் கழகத்தால் முனைவர் (டாக்டர்) பட்டம் வழங்கப் பெற்றுள்ளார். இவர் பொற்கிழிக் கவிதைப் போட்டியில் முதற் பரிசு பெற்றவர் என்பதும், கிடைத்தற்கரிய இரண்டாயிரத்துக்கு மேற்பட்ட பழைய நூல்களைத் தேடித் தொகுத்து வைத்துள்ளார் என்பதும் குறிப்பிடத்தக்கவை.

## மறைமலையடிகள் நூலக வளர்ச்சிக்கு நன்கொடை

(முன் இதழ் ௨௬௮ ஆம் பக்கத் தொடர்ச்சி)

| | | |
|---|---|---|
| உயர்திரு. இரா. முத்துக்குமாரசாமி அவர்கள் | 10 | 00 |
| பேராசிரியர் ஏ. ஆர். முத்தையன் அவர்கள் | 10 | 00 |
| திரு. ஆ. சுப்பையா பிள்ளை அவர்கள் (கழக மேலாளர்) | 5 | 00 |
| கயப்பாக்கம் திரு. முத்துலிங்கா ரெட்டியார் அவர்கள் | 5 | 00 |
| திரு. A. T. A. ஈஸ்வர் அவர்கள் | 5 | 00 |
| திருமுருக விசாக நம்பி அவர்கள் | 5 | 00 |
| சூரன்குடி திரு. அ. ஆறுமுகம் அவர்கள் | 5 | 00 |
| கல்லை. தே. கண்ணன் அவர்கள் (ஆசிரியர் 'வள்ளுவர்வழி') | 5 | 00 |
| திரு. முருக. இராமலிங்கம், சைதாப்பேட்டை | 10 | 00 |
| திரு. K. வேணுகோபாலன் அவர்கள் மேலாளர், சாந்தி தியேட்டர், சென்னை-2 (தம் அன்னையார் நினைவாக) | 25 | 00 |
| திரு. வி. சுப்பிரமணியன், கொரட்டூர் (பெயர்த்தியின் திருமணத்தை முன்னிட்டு) | 101 | 00 |

தென்னிந்திய தமிழ்ச் சங்கத்திற்காக
80, பிரகாசம் சாலை, சென்னை-108. அப்பர் அச்சகத்தில்
திரு. இரா. முத்துக்குமாரசாமி அவர்களால் அச்சிடப்பெற்றது.
ஆசிரியர் : இரா. முத்துக்குமாரசாமி, எம். ஏ., பி. லிப்.

## "செந்தமிழ்ச் செல்வி"

| ஆண்டுக் கையொப்பம் | | வாழ்நாள் கையொப்பம் | |
|---|---|---|---|
| உள்நாடு ரூ. | 20 - 00 | உள்நாடு ரூ. | 200 - 00 |
| வெளிநாடு ரூ. | 80 - 00 | வெளிநாடு ரூ. | 600 - 00 |

அப்பர் அச்சகம், சென்னை-108.